# பூமியின் புன்னகை

— கவிதைகள் —

நா. பார்த்தசாரதி

தொலைபேசி: 843226

பூமியின் புன்னகை (கவிதைகள்)
முதற்பதிப்பு : டிசம்பர், 1986

விலை ரூ. 7-50

BOOMIYIN PUNNAGAI
(Poems in Tamil)
by Naa. PARTHASARATHY

first edition: December, 1986
100 Pages
10pt letters
18x12.5 cms
box board binding
TAMIL PUTHAKALAYAM
58, t. p. koil street
Triplicane ; Madras-600 005
Price Rs. 7-50

அச்சிட்டோர் :
பூஞ்சோலை அச்சகம்
சென்னை-600 005

# முன்னுரை

'பூமியின் புன்னகை' என்னும் இக் கவிதைத் தொகுதி என்னுடைய இரண்டாவது கவிதைத் தொகுப்பாக இப்போது வெளிவருகிறது. முன்பு வெளியான கவிதைகள்—'மணிவண்ணன் கவிதைகள்' என்ற பெயரில் புத்தகமாக வெளி வந்தன. அவை பெரும்பாலும் அழகியல் கவிதைகள், இயற்கை வருணனைப் பாடல்கள் மட்டுமே. 1969க்குப் பின்னர் தீபம் இதழில் 'செங்குளம் வீரசிங்கக் கவிராயர்' என்ற பெயரில் நான் எழுதிய கவிதைகள் பல இப்போது இப் புத்தகத்தில் வருகின்றன. வேறு சில சமகாலக் கவிதைகளும் இணைகின்றன.

இங்கே இது என் பார்வையில் சற்றே வேறு வகையான கவிதைத் தொகுதியாகும். மரபும், நவீனமும் இணைந்த பழமையும் புதுமையும் இணைந்த கவிதைகள் இதில் அதிக முள்ளன. இயற்கை அழகு வருணனைப் பகுதியும் கொஞ்சம் உண்டு. சமூகம், அரசியல், பொதுவாழ்வின் பிரச்சினைகள் பற்றிக் குத்திக் காட்டும் கவிதைகளை இதில் நீங்கள் சற்றே அதிகமாகக் காணமுடியும். இதை என் வளர்ச்சி மாறுதல்—அல்லது—தேறிய போக்கு-எப்படி' நீங்கள் கணிப்பீர்களோ எனக்குத் தெரியாது. சமகாலப் பிரச்சினைகளைச் சிந்திக்காமல் கவி எழுத முடியாது. கூடாது. அருவியும், குருவியும் மயிலும் மானுமே பாடற் பொருளாக நிற்க முடியாது. புதியனவும் இடம் பெறுவது காலக் கட்டாயம். 'ஒன்ஸைட் பேப்பர் கிடைக்கவில்லை. அதனால் என் கவியை இன்னும் நான் படைக்க வில்லை'—என்று முன்பு எழுதிய நானே நிறைய ஒன்ஸைட்

பேப்பரும்-பலஸைடு விஷயங்களும் கிடைத்ததால் எந்தப் பிரச்னை பற்றியும் பயப்படாமல் கூட இதில் சில கவிதைகளை எழுதியுள்ளேன். அச்சமற்ற சிந்தனைகளை அழகிய சொற்களில் கவினுற வெளியிடுவதே கவிதை. அது புதிதானால் என்ன? பழையதானல் என்ன? புதிதும் பழையதும்-இரண்டுமே இதில் இருக்கிறது, படியுங்கள். தமிழ்ப் புத்தகாலயம் உங்களுக்கு அந்த வாய்ப்பை அளிக்கிறது. நன்றி, வணக்கம்.

தீபம்-சென்னை
9-12-1986

நா. பார்த்தசாரதி

# பூமி சிரிக்கின்ருள்!

● சந்திர மண்டலத் தெல்லையிலே—மானிடர்
தனியாய் நடந்த சாதனையும்

எந்திர நுணுக்க இயல்புகளும்—உலகில்
எங்கும் வளர்ந்து கிளைத்திடு நல்

மந்திர ஞானப் புதுமைகளும்—இங்கு
மலைமலை யாக வளர்ந்திடினும்

இந்திர நீலம் இதழ் மலர்ந்தே—ஓர்
இங்கித மாகப் பூப்பதையே

சின்னக் குழந்தை சிரிப்பதுபோல்—நான்
சித்தம் கிறங்கிடப் பார்த்திருப்பேன்

வண்ணக் களஞ்சிய வகை வகையாய்ப்—புது
வனப்புக் காட்டும் நகை நகையாய்

எண்ணத் தொலையா நறுமணமாய்—ஏதும்
எழிலிற் குறையா விதவிதமாய்

அன்னை பூமி சிரிக்கின்ருள்—அவள்
அத்தனை சிரிப்பும் மலராகும்!

போட்டி பொருமை பகைமைகளைச்—சிறு
பொய்ம்மைக் கலகப் பூசல்களைக்

காட்டு மனிதன் வளர்ந்த பினும்—மிகு
காட்டுத் தனமாய் நடப்பதனைக்

கூட்டம் கூடிப் பிரிவதனைத்—தத்தம்
கொள்கைகள் மதங்கள் சாதி என்றே

ஆட்டம் போடுதல் கண்டே—நம்
அன்னை பூமி சிரிக்கின்றாள்!

மனிதனை மனிதன் மாய்ப்பதனைச்—சிலர்
மதங்களின் பெயரால் மடிவதனைக்

கனிதனை விட்டுக்கா யினைநாடலை—வெறும்
கயமையின் வகைகள் கவனமாவதை

அணிதனைச் சேர்த் தழிவுகள் செய்வதை—அண்டை
அயலவர் வாழஅனு மதியாததைப்

பிணிதனைச் சோர்வைப் பீடையை—மனப்
பெருமைகள் இல்லாக் கீழ்மையை

நாள்தோறும் பார்த்துப் பார்த்தே—அவள்
நகைக் கின்றாள் விலாப் புடைக்க

ஊர்தோறும் இடந்தோறும் ஒவ்வொருநாள்—விடியும்
வைகறையும் வகை வகையாய் நிறநிறமாய்ப்

பேர்வேறாய் மணம்வேறாய்ப் பூமித்தாய்—இங்கு
பூப்பூவாய் நகைப்பதையே பார்க்கின்றோம்.

ஆர் வேறு சொன்னாலும் நம்புகிலேன்—இதன்
அந்தரங்கம் நானறிவேன் நன்கறிவேன்!

திருந்தாதோ இவ் வுலகமெனச் சீறுகையில்—அவள்
சிவப்பாய்ப் பூத்துச் சினக்கின்றாள்.

வருங்கால நம்பிக்கை சமாதானக்—காட்சி
வகுப்பது போல் வெள்ளை வண்ணம்

தருங்கால நன்மைகளின் மங்கலத்தை—ஒரு
சாட்சியிட மஞ்சள் நிற மலர்ச்சிகளும்

ஒழுங்கான நலத்துடனே உதவிகளை—இனி
உருவகிக்கும் பச்சையொடு நல் நீலம்

இனக்கொலை மனக்கொலை படுகொலைகள்—உலகில்
இருப்பவர் இல்லார் பேதங்கள்

தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர்—உருகித்
தவித்திடல் வருந்திடல் தளர்ச்சிகள்

எனப்பல துயர்களில் இடிந்தயர்ந்தே—வாடி
இதயம் கறுத்த வேதனைகள்

கணக்காய் மலர்ந்த கறுநிறமாம்—அங்கு
கனக்கும் இதயச் சுமையவையாம்!
(இவ்வாறாய்ப்)

பூமி சிரிக்கும் சிரிப்பறிந்தும்—நல்ல
புத்தி தெளியா மானிடரே

நீவி யெடுத்தே நறுமலரை—நீர்
நித்தலும் தொடுத்து நுகர்கின்றீர்!

கேலி யெடுத்து நகைப்பதனை—இரு
காது கொடுத்துக் கேட்டிலிரேல்

பாவி மண்ணில் அங்கங்கே—கண்கள்
பார்த்தும் புரிய முடியாதோ?

**மறுபடி மலர்தல்**

● அந்திமகள் போர்த்த
ஆரிருளின் போர்வையிலே
வெந்து மனம் வாடி
விடிந்தவுடன் மலரானாய்
சந்ததமும் பூத்திருப்பாய்
சருகாகி மண் புகுந்தால்
மந்திரம் போல் மொட்டாவாய்
மறுபடியும் மலராவாய்!

**நளினி**

● கருமேகம் சரியக்
குறுநிலவு வருவதுபோல்
கருநாகம் நெளியக்
கமலம் மலர் வதுபோல்
ஒரு காதில் சுரிகுழல்
ஒசிந்தாடத்
தெருவோரம் நடந்துவரும்
சிங்கார நளினி

**காவியம்**

● கோல முகமதியிற் சிறுநாணக்
குங்குமப் பூச் சிவந்து
நீல விழிமலரிற் சிலகோடி
நெஞ்சி னுரை யுவந்து
கால மளந்திடும் சிறுபோதிற்
காவிய மனைத்தும் நீயாகி
ஜாலம் புரிகிற பேரழகே
சரித்திரமனைத்தும் நீதானே!

**காவியக் காதலர்**

- சாவும் துயருமழியச்
  சரிதம் புகழ் பேச

ஓவியக் கமலம்போல்
ஒளி வாடித் தேயாக்

காவியக் காதலிருவர்.

**மோதிர விரல்**

- தீயினில் தளிர்த்ததோர்—பொற்
  செழுங் கொழுந்தெனவே

மாயக் கை விரலாள்—அதில்
மன்மதன் சொக்கிடும்

கோல மோகனச் சிறு
மோதிர மொன்றுடையாள்.

**மேனி**

- முகிலுமிருளும் கலந்துபின்
  மூண்டுசரிந்த கருங்குழலாள்

துகிலும்பட்டும் புனைந்துபின்
தோன்றிவந்த பெண்மயிலாள்

குயிலும் தேனும் இணைந்துபின்
கூவிப் பதிந்த சொல்லிசையாள்

வெயிலும் ஒளியும் செம்பொனும்
வீதமாய்ச் சமைந்த மேனியினள்.

# தீபாவளி மாப்பிள்ளை 1970 ரகம்

● அத்திம்பேர் வாங்கிவரும் சீனவெடி
　　ஆசையினுல் அக்காபால் தூதுபோகும்
முத்தான தம்பியர்கள் எல்லாரும்
　　முழுப்பக்க நகைச்சுவையாய் வெளிவந்து
பத்திரிகை மலர்களிலே நிறைந்திருப்பர்
　　பட்டாசு சுடுகையிலே நடுநடுங்கி
அத்தானைத் தழுவிடும் அம்புலுவை
　　அம்பிகளும் கேலிசெய்து சிரித்திருப்பர்.
துப்பாக்கி சுடுகின்ற ஜேம்ஸ்பாண்டின்
　　சுறுசுறுப்புப் படம்பார்க்க விரைகையிலே
அப்பாவே எதிர்ப்படினும் சுட்டுவிடும்
　　அம்பியைப்போய் அக்காவைக் கூப்பிடென்ருல்
தப்பாமல் மறுத்துவிட்டு நழுவலன்றிச்
　　சமரசமாய் ஒத்துழைக்க இசையமாட்டான்
ஜப்பானில் எக்ஸ்போ பார்த்துவிட்டுத்
　　தாய்லாந்து வழியாகத் திரும்பிவரும்

இக்கால மாப்பிளைக்கு நேரமெங்கே?
இதமாக அருகமர்ந்து கொஞ்சுதற்குத்

தற்காலத் தலைத்தீ பாவளியில்
சமயமேது வார்த்தையேது பிரியமேது

கற்பதித்த மோதிரந்தான் தராவிடிலோ
கண்டனத்துக் காளாகும் மாமனார்கள்

சொற்பொருந்தப் பணிந்து கெஞ்சும்
தொல்லைப் பழங்கால மாமனார்கள்.

இந்நாளில் மாமனாரோ' இந்து'விலே
எடுப்பாகத் தெரிகின்ற முதற்சேதி

பொன்னான வியட்நாமின் போர்களினாற்
புகைகின்ற கனல்பற்றி வாதிப்பார்

எந்நாளும் விற்காத விலைக்குயர்ந்தே
எண்ணெய்புளி விற்பதனை எடுத்துரைப்பார்

தம்நாளில் ரூபாய்க்குப் பதினாலுபடியரிசி
தந்ததனைச் சொல்லி மகிழ்விப்பார்.

மோதிரமும் ரிஸ்ட்வாட்சும் வேண்டுமென்று
முன்கோபப் படுகின்ற மாப்பிளையைக்

காதலினால் வசப்படுத்தப் பெண்மூலம்
சதிசெய்யும் மாமனார்கள் பலருண்டு

ஆதரவாய்த் தன்செலவில் அவைசெய்து
தாய்தந்தை ஏமாறத் தியாகம்செயும்

மேதகுநல் மாப்பிளைகள் பலருண்டு
முன்னாள்போல் இந்நாளில் நடக்காது.

இராக்கெட்டு விடுகின்ற நம்நாளில்
இராக்கெட்டுத் தூக்கமின்றி இரயிலேறிப்

பாக்கெட்டு மணியெல்லாம் செலவுசெய்து
பத்துநாட்கள் முன்னதாக வந்துசேர்ந்து

போக்கற்றுப் போகாத மாமனுரைப்
பொழுதுக்கும் துயர்படுத்தாப் பெருந்தன்மை

வாக்குடையான் காதலுள்ளான் 1970 ரகம்
வருங்கால மாமனுர்கள் தொழுங்காலோன். ●

## புதுக் கவிதை!

● உச்சிவெயில் நடுப்பகலில் ஒருநாள்
உடுப்பிஹோட்டல் அடுப்படியில் மணிக்கணக்காய்ப்

பச்சைவேர்வையில் குளித்துவந்து சர்வர்ப்
பையன்கொடுத்த புதுப்பால் காபியருந்தி

எச்சரிக்கையாக மனத்தெண்ணித் தீர்மானித்தே
இன்னெரு புதுக்கவிதை வகையாக

நிச்சயம் எழுதிடணும் என்றே
நினைத்துத் திட்டம் வைத்திருந்தும்

ஒன்ஸைட் பேப்பர் கிடைக்கவில்லை—அதனால்
என்கவியை இன்னும்நான் படைக்கவில்லை.

ஆகாயம் பூமி கடல் என்றும்
ஆதவன் சந்திரன் விண்மீன்என்றும்

ஆதாயம் பார்த்தன்றே கவிவாணர்
அத்தனையும் பாடிவிட்டுப் போனபின்னர்

ஏதோ டெலிபோன் ஆபரேட்டர் டைப்பிஸ்ட்
இங்க் ஃபில்லர் குண்டூசி எலிவேட்டர்
மாதரசி ஹேர்ப்பின் மாங்காய் ஊறுகாய்
மண்ணெண் ணெய்ப் புனல் ஸ்குருஆணி
மீதமுள்ள தெல்லாமே தேர்ந்தெடுத்து
மெதுவாய் ஒருபுதுக்கவிதை பாடுதற்கு
ஒன்ஸைட் பேப்பர் கிடைக்கவில்லை—அதனால்
என்கவியை இன்னும்நான் படைக்கவில்லை.

எழுத்துநடை கணையாழி என்றெல்லாம்
எழுதுவதைப் போட்டுவிட இதழிருந்தும்
முழுத்தரத்தில் புதுக்கவிதை என்கிற
முழுமூச்சுப் போருக்குத்தளம் அமைத்து
அழுத்தமுறப் போரிடவென் றன்பர்பலரிருந்தும்
அண்டர்வேர் கிழிந்ததனைக் கருப்பொருளாய்
ஆக்கிவிட்டே அறுநூறுபுதுக்கவிதை பாடிடலாம்
கிண்டிரேஸ் ஸ்டூவர்டைக் கவிகளிலே கிளந்திடலாம்
ஒன்ஸைட் பேப்பர் கிடைக்கவில்லை—அதனால்
என்கவியை இன்னும்நான் படைக்கவில்லை.

டீஸல் மணம்கமழும் சென்னைநகர்ப் பேருந்தில்
திருக்குறளைப் படித்தபடி ஆடிவிழும்
பாஸஞ்சர் படுந்தொல்லை அத்தனையும் கூறுதற்குப்
பஸ்ஸாற்றுப் படையொன்று பாடுடுவேன்
வாஸ்லைன் ஊதுபத்தி டூத்பேஸ்ட் பார்சோப்
வைப்பர் ஸ்டெப்னி ப்ரேஸியர்ஸ் இண்டிகேடர்
ஹோஸ்டஸ் நரிக்குறத்தி நகரசபை பில்கலெக்டர்
இவரனைவரையும் புதுக்கவிதை பாடத்திட்டமிட்டும்
ஒன்ஸைட் பேப்பர் கிடைக்கவில்லை—அதனால்
என்கவியை இன்னும்நான் படைக்கவில்லை.

# நாகரிகப் பிச்சை

● ஐயாசாமீ! அரைக்காசு தர்மமென்றே
அழுகுரலில் கேட்பவர்கள் யாசிப்போர்
கையால் மொழியால் கண்ணீரால்
காசினியோர் முன்பாக மன்றுடிக்
குய்யோ முறையோவென் றலறியபின்
கூழுக்கும் கந்தைக்கும் வழிபிறக்கும்
மெய்யாய் இவர்நிலைதான் இப்படியாய்
மேலும்மொரு பிச்சையின்று வளர்கிறது

ஓட்டுக்குப் பிச்சை உதவிநிதிப் பிச்சை
உபசரிப்பு விழாவுக்குப் பொருட்பிச்சை
நாட்டுக்கு நன்மைசெயும் தொண்டுக்கு
நாள்தோறும் விலைபோலப் பலபிச்சை
வீட்டுக்கு நிதிவழங்கும் விநோதங்கள்
விரைவாகப் பறந்துசென்றே தொண்டுசெயும்
ரேட்டுக்குத் தகுந்தாற்போல் கார்வழங்கல்
நிறுவைக்குச் சரிசமமாய் வெங்காயம்

ஓசியினில் உடற்சிகிச்சை மலர்மாலை
ஊரார் பணச்செலவில் பயணங்கள்

காசினியில் உள்ளதெலாம் அனுபவிக்கக்
கட்சிதரும் பணமென்னும் புதுப்பிச்சை

மோசடிக்கு மலர்க்கிரீடம் சுவரொட்டி
முதுகெல்லாம் புரள்கின்ற பொன்னுடை

காசடிக்கும் பம்மாத்து வேலைக்குக்
கட்சியெனும் திருவோடு கருவியாகும்.

மக்கள் பணச்செலவில் மாடிவீடு
மக்கள் பணச்செலவில் வாகனங்கள்

மக்கள் பணச்செலவில் சாப்பாடு
மக்கள் பணச்செலவில் பயணங்கள்

மக்கள் பணச்செலவில் உபதேசம்
மக்கள் பணச்செலவில் நாற்காலி

எக்கணமும் எல்லாமும் ஊர்ச்செலவில்
இதுவன்றோ பிச்சையினும் பெரும்பிச்சை?

சந்தியினில் தெருமுனையில் சாக்கடையில்
சத்திரத்து முன்றிலினில் தேரடியில்

வந்திருந்து துணிவிரித்துப் பிச்சையென்று
வருவோர்க்கும் போவோர்க்கும் சலாம்போடும்

நொந்தவர்போல் நோகாமல் நுடங்காமல்
'நும்தலைவன் மந்திரிநான்' எனநிமிர்ந்து

தந்தவர்தம் ஓட்டெல்லாம் தற்செருக்காய்த்
தருக்குமொரு புதுப்பிச்சை பொதுப்பிச்சை!

## பலி

பேதை வயதில்
பிள்ளைமைச் செருக்கில்
தேரடி முனையில்
தெருவிளக் கடியில்
காரணம் இன்றியும்
காசுகள் இன்றியும்
யாரெது சொல்வர்
எவரிதைப் படிப்பர்
ஊரெது கூறும்
உறவெது பேசுமென்
றோரவும் உணரவும்
உணர்த்தவும் செயாமல்
வெய்யிலில் வாடிச்
சாரலில் நனைந்து
தரையினில் படுத்துப்
புழுதியில் குளித்துக்

கூதலில் விதிர்த்துக்
குளிரினில் நடுங்கி
வேதனை யடைந்து
விரக்தியில் சொன்னதைப்
பேர்இட வைத்துப்
பெரிதாய் எழுதி
அச்சிட் டடுக்கிக்
கூவி யழைத்துக்
குதூகல மாக்கி
விலையும் குறித்துச்
சந்தையில் விற்றுச்
சான்றுகள் பெற்றுக்
காசினி புகழப்
புகழும் கனக்க
ஊரவர் கூடி
உற்சவம் எடுத்துப்

பரிசில் வழங்கிப்
பட்டயம் அளித்தார்
பேதைமை அகன்றது
பிள்ளைமை கழிந்தது
செருக்கும் அழிந்தது
தீவிரம் தொலைந்தது
ஒருசில கணங்களில்
ஒருநூ ருண்டுகள்
மூத்தது போல
மூப்பும் வந்தது
முனைப்புத் தவிர்ந்தது.
மீண்டும்
தேரடி முனைக்குத்
தெருவிளக் கடிக்குத்
துணிந்தே ஓடஎன்
கால்கள் தயங்குவதேன்
நடையும் தளர்வதேன்
ஊரவர் கூடி
உற்சவம் எடுத்துப்
பரிசில் வழங்கிப்
பட்டய மளித்துத்
தம்முள் மகிழ்ந்தே
என்னுள் எதைக் கொன்ருர்?
யாருக்கு யாரை
எதற்கு எதைப் பலியிட்டார்?

## இலையுதிர் காலத்திரவு

காயும் சருகுதிர மாவிற் கனல் போற்
பாயும் தளிர்நீளப் பச்சைமலை—ஆயன்
கலை தெரிய ஊதும் குழல் கனலும்
இலையுதிர் காலத் திரவு!

# ஓர் பேரொளி இன்றில்லை

● இமயமலை போன்றிருந்த மிகப்பெரிய
எம்தலைவர் இன்றில்லை இனியில்லை

சமயமறிந் தெப்பணியும் பொருத்தமுறச்
சாதிக்கும் சதுரரவர் வாழ்வினிலே

அமைதிமிகு பேருருவத் தண்ணல்
அருளாளர் காந்திவழி ஆதரிப்பார்

குமையும் இருட்குகையில் தவிப்போர்க்குக்
குத்துவிளக்கொளியாய் அவரிருந்தார்

இன்றில்லை

விரோதங்கள் தேடிவரும் காலத்தும்
வித்தகமாய் நட்புறவு நாடுகின்ற

குரோதங்கள் இல்லாத பெருந்தலைவர்
கொள்கையினில் சமதர்மப் பெருவீரர்

தராதரங்கள் அறிவதிலே இப்புவியில்
தமக்குநிகர் எவருமில்லை எனற்குரியர்

வராதிறந்து எமைமறந்து வலியேதுமில்லாத
சுகமரணம் கண்டெம்மை வலிக்கவைத்தார்.

ஒற்றுமையே பெரிதென்று பலகாலும்
ஊர்க்குரைத்த தலைவருக்கு நாமின்று
கற்றறிந்தோர் சாட்சியாகச் செய்கின்ற
காரியந்தான் ஒன்றுண்டு நன்றுண்டு
சுற்றுமுள்ள தேசியசக்திகளை ஒன்றுக்கிச்
சுதந்திர பாரதமாம் நம்நாட்டை
மற்றவர்கள் பார்வையிலே லமதிப்புயர்த்தி
மிகப்பெரிய காங்கிரஸை வளர்த்திடுவோம்.

(நவம்பர், 1975)

★

# மலர்களைத் தேடி

பூமியில் வல்லவர் நடுவினிலே—நான்
பொய்மை எதிர்த்துக் கொதிக்கின்றேன்

மாமிசம் விற்பவர் நடுவினிலே—நான்
மலர்களைத் தேடித் தவிக்கின்றேன்

பசியைக் காட்டிப் பயமுறுத்தல்—வெறும்
பலத்தைக் காட்டிப் பயமுறுத்தல்

வசியப்படுத்தி வசப்படுத்தல்—என்
வாழ்வைக் காட்டி அதிரவைத்தல்

சாதியைக் காட்டித் தூற்றிடுதல்—ஒரு
சாதியும் இல்லா மானிடத்தைப்

பேதப் படுத்திப் பிழைத்திடுதல்—இவை
பெருகிப் படரும் காலத்தில்

நீதியைத் தேடிப் புறப்பட்டேன்—நான்
நெடுந்தூரம் ஓடிக் களைத்துவிட்டேன்

பாதியில் திரும்ப மனம் இல்லை—என்
பாதையை மாற்றவும் நினைக்கவில்லை

சாமியை நம்பித் தொழுதபின்னே—இங்கு
சத்தியம் ஜெயிக்க வேணும் என்றே

பூமியில் முழுதும் தேடியபின்—காலில்
புழுதியும் படிந்தே வாடியபின்

காமக் குரோத லோபத்தால்—வீண்
கயமைக் குணத்தொடு தாபத்தால்

மாமிசம் விற்பவர் நடுவினிலே—நான்
மலர்களைத் தேடித் தவிக்கின்றேன்

பித்தர்கள் நிறைந்த உலகினிலே—நான்
பேதைமை நீங்கித் தவிக்கின்றேன்

எத்தர்கள் மலிந்த இந்நாளில்—நான்
ஏழ்மையில் நலிந்து கொதிக்கின்றேன்

கொள்கையை விடவும் முடியவில்லை—ஊரைக்
கொள்ளை இடவும் துணியவில்லை

உண்மையைத் தேடி ஓய்ந்துவிட்டேன்—உயிர்
உள்ளதை நாடி மாய்ந்துவிட்டேன்

பூமியில் வல்லவர் நடுவினிலே—நான்
பொய்யை எதிர்த்துக் கொதிக்கின்றேன்

மாமிசம் விற்பவர் நடுவினிலே—நான்
மலர்களைத் தேடித் தவிக்கின்றேன்.

# ஒரு தலைவரின் அடுத்த பிறவி ஆசை

- உருப்படியாய்ச் சிலநல்ல செய்ய எண்ணி
  ஊர்த் தெருவில் படியிறங்கி நடக்குமுன்னே
  பொருப்பளவு தூக்கிவைத்துப் புகழ்ந்தென்னைப்
  பொறுப்பின்றிக் கைத்தட்டிப் பெயர் வளர்த்துக்
  கருப்பூரம் மேலெடுத்து மாலையிட்டுக்
  காசுகளால் மூடிவைத்துப் பதவியெனும்
  விருப்பூறும் நாற்காலி தனிலமர்த்தி
  வீணாக்கி மயங்கவைத்தீர் கெடுத்துவிட்டீர்!
  தொண்டுசெய்யப் பழகுமுன்னே எனைய ழைத்துத்
  தூணுயரச் சிலை வடித்துத் திறந்துவைத்தீர்
  அண்டைவீட்டார் துயரங்கள் அறியுமுன்னே
  'அநாத ரட்சகா ஆபத்பாந்தவா
  பண்டறியாப் பெரும் புகழின் படைப்பாளா
  பல்லோர்க்கும் உழைக்கின்ற பணியாளா
  விண்டறியாச் சீருடையாய்' என்றெல்லாம்
  வீணாகப் புகழ வைத்தீர் கெடுத்துவிட்டீர்!

உருப் படியாய்ச் சிலைநல்ல செய்ய எண்ணி
உள்ளங்கால் மண்தோய நடக்கு முன்னே

செருப்படிக்குத் தங்கமுலாம் பூசிவிட்டுத்
தெருமண்ணைக் காலிரண்டும் தீண்டாமல்

மறுப்பவர்தம் குரலெதுவும் என் செவியை
மடுக்காமல் தடுக்காமல் மாட்டிவைத்தீர்

பொறுப்பில்லாத் தலைவனுக்கிப் பிறர்துயரம்
கண்மறையப் பூச்சூட்டி விட்டு விட்டீர்!

அழுகுரலைக் கேட்காமல் மெல்லிடையின்
அரம்பையரை இசைபாடிச் சூழவிட்டீர்

எழுதரிய துயரங்கள் எவை யேனும்
என் கண்ணில் படமுடியா உயரத்தில்

தொழுகின்ற திருக்கூட்டம் உருவாக்கித்
துப்புரவாய்க் காயடித்து மழுங்கவைத்தீர்

பழுதின்றித் தொண்டு செய்ய வந்தவனைப்
பதவியெனும் சிலுவையினில் அறைந்துவிட்டீர்!

சாவதற்கு முன்புவரை என் வாழ்வைச்
சாரமில்லாப் புகழ் மொழியால் அலங்கரித்து

ஊரவர்க்கு, விருந்தாக்கி உலவவிட்டீர்
உள்ளத்தை இருட்டாக்கி அலற விட்டீர்

வேறெவர்க்கும் இல்லாத சுகபோகம்
விளைவித்தென் விவேகத்தைச் சூறையிட்டீர்

பேரெதற்கு? புகழெதற்கு? சிலைஎதற்கு?
பிறந்துவந்த நோக்கத்தைப் பிறழவிட்டீர்?

மற்றுமொரு பிறப்பில்நான் இவ்வுலகில்
மானிடனாய் வந்தாலும் நிச்சயமாய்ச்

சுற்றுமொரு சிறிதுணியால் இடைமறைத்துச்
சுடுகாடு காத்திடுவேன் இல்லையெனில்

மற்றுமொரு கோல் பிடித்து மாடுமேய்ப்பேன்
பதவிகளில் சிக்க மாட்டேன்

முற்றிலுமே தொண்டு செய்யும்
முழுமனித வாழ்க்கையினைத் தேடிடுவேன்.

(நவம்பர், 1971)

# நாளொரு படம் பார்த்தேன்

வில்வெட்டுத் துணிதரித்த ஏழை
வேலையில்லாக் கதாநாயகன்
பல்வெட்டு முகவெட்டுப் பகல்வேஷப்
பவிஷொன்றும் குறையாமல்
சொல்வெட்டும் வசனங்கள் எல்லாம்
சொகுசாகப் பேசியங்கே
நல்வட்ட மதிமுகத்தில் நெஞ்சில்
நலிவோ வியர்வோ சிறிதுமின்றிக்
கைவண்டி இழுக்கின்றான் தன்னுடைய
கால்களிலே அழுக்கின்றிப்
பொய்வறுமை நடிக்கின்றான் முகத்தில்
புதுமெருகு தழைக்கின்றான் என
நாளொருபடம் பார்த்தேன் பட்டி
நாய்கள் சிரிக்கும் தெருக்கூத்தாய்
நாளொரு படம் பார்த்தேன்.
மூச்சுவிடுமுன்னே முன்னூறு பின்பாட்டு
முதுகும் தொப்பூழும் முன்தெரிய

வீச்சுவீச்சென்று கூத்தாடும்
விலைமகளிர் நடனங்கள் படமெல்லாம்
பேச்சியணை பிரமனூர் அரண்மனைகள்
பிருந்தாவனம் சாத்தனூர் சிவசமுத்திரம்

கூச்சமின்றி யிங்கெல்லாம் பலர்கூடிக்
குரங்குகள்போல் குதிப்பதுவும் ஏராளம்

பாட்டுத் தொடங்குங்கால் உள்ளூர்ப் பார்க்காகி
பத்துமணித்துளியில் ஊட்டிமலைமீதில்

மேட்டுத் தரைநெடுகப் பாடியலைந்திடுவார்
முடிவதற்குள் மேட்டூர் மலம்புழாஎன

நாட்டிலுள நந்தவனம் அத்தனையும்
நாடிப்போய்ப் பாட்டொன்று பாடிடவே

நானொரு படம்பார்த்தேன் பட்டி
நாய்கள் சிரிக்கும் தெருக்கூத்தாய்

நானொரு படம் பார்த்தேன்.

கொக்குச் சுடுவதுபோல் துப்பாக்கிக்
குழலெடுத்து எதிரிகளை அக்கணமே

பக்குப் பக்கென்று சுட்டுவிட்டுப்
பல்லை நறநறவென் றசைத்துச்

சக்கைப் போடு போடுகின்ற
சராசரியாம் சினிமா வில்லன்

தலைமாட்டில் விளக்கணையும் சமயத்தே
டைரக்டர் சொன்னபடி சாகின்ற

வலைமான்போல் பெண்ணுக்குத் தந்தை
நாகரிக உலகத்தில் இறந்தவர்க்காய்

நான்குதினம் அழுகின்ற பட்டதாரிக் கதைத்தலைவி
தன்வயிற்றுச் சோற்றுக்கே தாளமிடும்

தனிவறுமைக் கதைத்தலைவன் அன்னவளை
என்னன்பே என்றழைக்கும் காதல்கள்

நானொரு படம் பார்த்தேன் பட்டி
நாய்கள் சிரிக்கும் தெருக்கூத்தாய்
நானொரு படம் பார்த்தேன்.

படத்தில் பாதிகதையில்லை
பார்த்ததில் மீதியும் பொருளில்லை
மடத்தனம் என்றதோர் சொல்லுக்கே

மலிவாய்க் கிடைக்கும் உதாரணமாய்ப்
படத்துறை போனதைப் பார்க்குங்கால்

பதைக்கும் நெஞ்சொடு சொல்லிடுவேன்
வாழ்க்கையை மறந்த சொப்பனங்கள்

வாழ்க்கையைக் காட்டும் வழியாகா
காக்கை பிடிக்கும் சிலபுல்லர்

காசுகள் சேர்க்கும் பலமூடர்

கூட்டிக் கொடுக்கும் சிலதரகர்
கூடிக் கலைகளை ஆள்கின்றார்

ஏட்டில் எழுதா மடத்தனமாய்
நானொரு படம் பார்த்தேன் பட்டி

நாய்கள் சிரிக்கும் தெருக்கூத்தாய்
நானொரு படம் பார்த்தேன்

இல்லார் கொடுமையும் இந்நாட்டில்
இருப்போர் சுரண்டலும் இந்நாள்
கல்லார் வறுமையும் கற்றோர் கயமையும்
கலைகளின் நலிவும் கவிகள் பஞ்சமும்
சொல்லால் வேஷமிட்டு மேடைகளில்
சுகபோக அரசியலின் நடிகர்களாய்
எல்லார் கண்களிலும் மண்தூவி
இலஞ்சப் பதவிகளில் அட்டைகளாய்க்
கொல்லாமல் குருதி யுறிஞ்சிநிதம்
கொலைபா தகங்கள் புரிகின்ற
வல்லாளர் திறமெல்லாம் சிறிதுமின்றி
வானத்துத் திரிசங்கு சொர்க்கம்போல்
இல்லாத வாழ்வுக்குக் கலைக்களையாய்
நானொரு படம் பார்த்தேன் பட்டி
நாய்கள் சிரிக்கும் தெருக்கூத்தாய்
நானொரு படம் பார்த்தேன்.

(ஆகஸ்ட், 1970)

# நகரப் பேருந்து

- இடித்துப் புடைத்து மேலேறி
 இடறி விழாமல் நின்றபின்னர்

அடுத்த கணத்தில் இருபுறமும்
 ஆளில்லா இருக்கை யேதும்

தடித்தவர்கள் தானமராப் பக்கத்திற்
 சான்ஸாக இருக்கிறதா எனப்பார்த்துப்

படித்தவன்போல் இல்லாத குறைக்கங்கே
 பார்த்தயரா நாசூக்கின் முகமலர்ந்து,

நின்றபடி யருகிலுள்ளார் மெயில்பேப்பர்
 நியூஸ்களும் தலைநீட்டிப் படித்துவிட்டு

என்றனுக்குப் பின்னாலே யுராய்கின்ற
 இங்கிதத்தாள் சேலைமுனைப் படையெடுப்பை

வென்றெடுத்து விலகிநின்று ஏர்பிரேக்கு
 வீறிடவே குலுங்கிவிழும் பயணிகளில்

இன்றெனக்குக் கைபோமோ கால்போமோ
எனப்பயந்து ஒருகையால் சட்டைப்பைச்

சில்லறையைத் துழாவித் தேடுகையில்
சில்லறையோ காசுகளோ சிறிதுமில்லை

மெல்ல மணிபர்ஸை வாய்திறந்து
மேலாக மீதியுள்ள ஒரு நோட்டைச்

சில்லிட்டு வேர்வைக் குளமாடிச்
செலவழியா தின்னும் மீதமிருக்கின்ற

பொல்லாத மாதக் கடைசியிலே
பொக்கிஷமாய்க் கையிருக்கும் சேமிப்பைக்

கொல்லும் ஒரு கொலைகாரன் போற்பிடித்து
மேற்கொணர்ந்து கண்டக்டர் வசம் நீட்டி

'கெல்லிஸ் ஒருடிக்கெட்' எனக்கேட்கக்
கோபமுடன் மேல்கீழாய் எனைப்பார்த்து

சில்லறையாய்த் தாவென்று சீறிவிட்டுச்
செவிகைப்ப விசிற்கொடுத்து நிறுத்தியபின்

மெல்ல இறங்கப்பா எனக்கூறி
மேலோன்போல் வழிவிட்டு நின்றுகொண்டான்.

என்னென்னவோ செய்யக் கொதிக்கின்ற
எரிநெஞ்சத் துயரமொடு ஏறெடுத்துப்

பின்னுகின்ற பார்வையினால் பார்க்குங்கால்
பெரிதாய்ச் சிரிக்கின்ற வள்ளுவரும்

'இன்னா செய்தாரை ஒறுத்தல்
இங்கு அவர்நாண நன்னயஞ் செய்துவிடல்'

என்னுமொரு திருக்குறளும் கண்ணெதிரே
இசைவாகத் தெரிகிறது புரிகிறது.

(செப் - 1970)

# இன்னுமா எழுதுகிறீர் கவி?

● கானல் நீர்தேடும் கலைமான்போல் படித்தவர்கள், நல்லவர்கள்

காய்ந்ததலைக் கெண்ணெய் தேடிக்

கூனல்முது கொடியத் தவிக்குங்கால் மற்றுங்கே

குதூகலமாய்க் கவிதைக்கும் கலைகளுக்கும்

நானே ராஜாவென் றரசியலின் செல்வாக்கால்

நாற்றிசையும் ஜால்ராக்கள் சூழ்ந்திடவே

வானம் பிளப்பதுபோல் துதிபாடி வருகின்ற

வக்கிரங்கள் பார்த்தபின்னும் கவிக்குலத்தின்

சேனைமறவன் செந்தமிழால் கவிசொன்ன சீராளன்

சுப்பிரமண்ய பாரதியும், அவன்வழியில்

தானொருவன் எனவந்த புதுச்சேரித்

தமிழ்க்கொண்டல்

ச. து. சு. யோகி கண்ணதாசன் இவரெல்லாம்

பேறுமுனையிற் பெறமுடியாப் பட்டங்கள் அத்தனையும்

பொய்யின் முனைதீட்டிப் பெற்றுவரும்

ஓநாய்க் கொடுமைகளைக் கண்ணெதிரே கண்டபினும்
உமக்கென்ன கவிவேண்டிக் கிடக்கிறதோ?

என்னமோ நீர்தான் தமிழ்மொழிக்கு எழிலூட்டி
இன்னமுதப் புதுக்கலவை வனப்பூட்டி

வன்னமாம் பலதிறமை வனைந்தூட்டிப் படைத்தாலும்
வகைவகையாய்க் கவிமாரி பொழிந்தாலும்

முன்னரே எழுதிவைத்த தலையெழுத்துச் சரியில்லை
மூண்டிருக்கும் பதவிகளை எதிர்ப்பறியீர்

இன்னுமா எழுதுகிறீர் கவியென்னும் சித்திரத்தை
இங்குமது பருப்பெல்லாம் வேகாது.

பதவிக்குப் பயப்பட்டுப் பலபேரைக் கவியென்று
பணிந்துவிடும் நம்நாட்டு வழக்கத்தால்

உதவிக்கு ஆளில்லா உயர்ந்தரகக் கவிகள் எல்லாம்
உப்புவிற்றோ புளிவிற்றோ பிழைத்திடலாம்

எதைவைத்துப் போரிடுவீர் இதயமிலா இந்நாட்டில்
இன்னுமா எழுதுகிறீர் தமிழ்க்கவிதை?

உதைபட்டுப் போகாதீர் ஊரோடு சேர்ந்துநீரும்
ஒலியெழவே ஜால்ராவைத் தட்டிவிடும்.

(செப்., 1971)

★

# அதிகம் விற்கிற நியூஸ் பேப்பர்

● மந்திரியார் பிரசங்கம் மரத்தடியில் கற்பழிப்பு
மாதவிடாய் மாத்திரைக்கு மகத்தான விளம்பரங்கள்
சந்துமுனைக் குழாயடியின் பரபரப்புச் சமாச்சாரம்
சட்டசபை வாயடிகள் மைதானக் கையடிகள்
முந்தியநாள் பொதுக்கூட்ட முழக்கங்கள் அறைகூவல்
முட்டத்தூர் நடுத்தெருவில் பட்டினியால் ஒரு சாவு
எந்தவொரு மாநிலமோ புயல்வெள்ள நிலைமைகளால்
இடர்பட்டு அலைக்கழியும் வேதனைகள் நிவாரணங்கள்
மார்க்கெட்டு நிலவரங்கள் மன்மதனுர் கைவைக்கும்
மங்கையர்கள் சிங்காரப் புகைப்படங்கள் 'பின்னப்'பில்
வார்க்கட்டின் சதைப்பிடிப்பில் மயக்குகின்ற வாசகர்கள்
வாடிக்கையான சினிமா காபரே வகையருக்கள்
ஊர்ப்பட்ட பேரெல்லாம் வாசிக்கும் ராசிபலன்
ரேஸ்குதிரை ஹேஷ்யங்கள் லாட்டரியின் திடீர்க்குபேரர்
ஆர்ப்பாட்ட மாய்விற்கும் மிகப்பெரிய நியூஸ்பேப்பர்
அடையாளம் இவையாகும் மிகையில்லை பேருண்மை.

(டிசம்பர்-1971)

# மலருக்கு ஒரு கதை

● தீபாவளி மலருக்குச்
சிறுகதையொன் றெழுதோணும்

பாபாத்மா, கொலைகளவு
பட்டினிகள் பெரும்பஞ்சமாகாது

சாகாத கதாபாத்ரம்
சரசரக்கும் புதுப்புடவை

தோதாக வரும்படிக்குச்
சோகங்கள் ஏதுமின்றித்

தீபாவளி மலருக்குச்
சிறுகதையொன் றெழுதோணும்

ஆபாச விஷயங்கள்
அத்தனையும் வந்தாலும்

சோபாவில் துவண்டிருக்கும்
சொகுசான கதைத்தலைவி

வாவா வென் றழைப்பதுபோல்
வடிவழகைக் காட்டிடினும்

நோகாமல் நடக்கின்ற
நொந்தவர்கள் காதலினை

வேகாத குறைப்பிரிய
விந்தையினை நகைச்சுவையை

ஆகாவென் றதிசயிக்க
அடுத்தடுத்துச் சொல்லோணும்

'நோ'சோகம் 'நோ'மரணம்
நுவன்றீரேல் கதைசாகும்

தீபாவளி மலருக்குச்
சிறுகதையொன் றெழுதோணும்

மாபாரதக் காலமுதல்
மடிசஞ்சிக் கத்தைக்குள்

பூ பாரம் கெடுதலின்றிப்
புனிதமெனத் தேர்ந்தெடுத்த

'ஏ'சோரம் எதுவுமின்றி
எழுதோணும் என்கதையை.

(அக்டோபர்-1971)

# சொத்துக் கணக்கு

1 மெத்தப் பணம் பொருள் சேர்த்தவர் மத்தியிலே
மேலும் மேலும் பதவிகள் பெற்றவர் கட்சியிலே
செத்துப் பிழைத்திடும் ஏழையர் சார்பினிலே
செயல்கள் புரிந்திடும் தொண்டர்கள் குரலினிலே
சொத்துக் கணக்கென் றொருகுரல் எழுந்ததுமே
சோர்ந்து தளர்ந்து மிரண்டு விட்டார்!
பத்துக் குரல்கள் சேர்ந்தொன்றாய் அந்தப்
பாமரன் குரலை யடக்கி விட்டார்!

2 எத்தர் கூடிய கூட்டத்தில் மக்கள்
ஏழ்மையைப் பற்றிப் பேசி விட்டார்
அத்தர் புனுகுகள் வாசனை கமகமக்க
அழுது புலம்பி உருகி விட்டார்!
சொத்துக் கணக்கென் றொருகுரல் எழுந்ததுமே
சோர்ந்து தளர்ந்து மிரண்டு விட்டார்.
பத்துக் குரல்கள் சேர்ந்தொன்றாய் அந்தப்
பாமரன் குரலை யடக்கி விட்டார்!

3 குத்தகை விட்டது போலோர் ஆட்சியிலே
கூடிக் கூடிக் கொள்ளைகள் அடித்துவிட்டார்!
பத்தரைமாற்றுத் தங்கமெல்லாம்
பாளம் பாளமாய்ப் பதுக்கி விட்டார்.
சொத்துக் கணக்கென் றொருகுரல் எழுந்ததுமே
சோர்ந்து தளர்ந்து மிரண்டு விட்டார்.
பத்துக் குரல்கள் சேர்ந்தொன்ருய் அந்தப்
பாமரன் குரலை அடக்கி விட்டார்.

4 சுத்தர்கள் துணிந்து பேசவும் அஞ்சும்
சுயநலவாதிகள் முரடர்கள் கட்சியிலே
பித்தனைப் போலொரு நல்லவன் வந்தே
பேதைகள் ஏழைகள் பாமரர் சார்பினிலே
சொத்துக் கணக்கென் றொருகுரல் எழுந்ததுமே
சோர்ந்து தளர்ந்து மிரண்டுவிட்டார்.
பத்துக் குரல்கள் சேர்ந்தொன்ருய் அந்தப்
பாமரன் குரலை அடக்கி விட்டார்!

5 மெத்தன மாக மறந்தது போல நடிப்பவர் மத்தியிலே
மெல்ல எழுந்து பேசவும் தெரியா மந்தையிலே
வித்தகமாக ஏழையின் சிரிப்பினை
வித்தைகள் காட்டும் சித்தர்கள் சந்தையிலே
அத்திகள் பூத்ததுபோல் ஓராள் அவசரமாகச்
சொத்துக் கணக்கென் றொருகுரல் எடுத்ததுமே
பத்துக் குரல்கள் சேர்ந்தொன்ருய் அந்தப்
பாமரன் குரலை அடக்கி விட்டார்!

●

# மண் ஜன்மம்

● மண்ணாய்க் கிடந்தேனை மேலோர்நாள்
மண்ணியல்தேர் குலால னொருவன்.

கண்ணாற் கண்டு விட்டான்
கருத்தில் கொண்டு விட்டான்

எண்ணாற் சொலமுடியா நொடிப்பொழுதில்
என்னையொரு பானையென வனைந்திட்டான்

கிண்ணாரம் செய்கின்ற கடவித்வான்
கேட்டவிலை கொடுத்தென்னை வாங்கிவிட்டான்

மேடையிலே கடவித்வான் மடியினிலே
மோகனமா யொலித்துவருங் காலையிலே

கோடையிலே யொருநா ளடைமழையில்
கொட்டத்தில் நீரொழுகு மிடத்தினிலே

ஆடையிலே மூடிவைத்தான் அன்னவன்றான்
ஆராத ஈரத்தோ டெனைமறுநாள்

காலையிலே எடுக்குங்காற் கைதவறிக்
காலடியிற் போட்டுவிட்டா ளையையோ!

கடவித்வான் மனைவி யென்னைக்
கையாலே வாரிப்பின் குப்பையிலே

படபடவென் றொலித்திடவே கொட்டிவிட்டாள்
பாருங்கள் நண்பர்களே என் வாழ்வை

தொடக்கூசும் களிமண்ணாய் இருந்தவென்னைத்
தொழிலாளி குடமாக்கி விற்றுவிட்டான்

கடக்காதல் வித்வானும் பெற்றுவிட்டான்
கச்சேரி மேடையிலும் தட்டிவிட்டான்

மண்ணோடு மண்ணாகக் கிடந்தவெனை
மதிநுட்பத் திறனாலே உருவாக்கிப்

பண்ணோடு கூடுமிசை செயச்செய்தான்
பாழும் விதியதனைப் பொறுக்கவில்லை.

மண்ணோடு மண்ணாகக் கலந்துவிட்டேன்
மறுபடியும் குயவனிதோ வந்துவிட்டான்

எண்ணாலே அளவிடலாம் பிறவியிதோ
எத்தனை நாள் பிறந்தழியு மிவ்வாழ்வோ?

# வேண்டுதல்

● போரற்ற பெருவுலகங் காண வேண்டும்<br>
பூமியெல்லாம் புதுமைநலங் கமழ வேண்டும்!

நீருற்ற முத்துக்கள் போலநல்ல கவிதைகளை<br>
நிதமெனக்கு நீகொண்டு தரல்வேண்டும்.

பசியற்ற பாரொன்று படைத்திடல் வேண்டும்<br>
பண்புநலம் பலவுமங்குச் செறிந்திடல்வேண்டும்.

வசியுற்ற மாந்தரெலாம் வசையற்ற பெரும்<br>
வாய்மைப் புகழ்மிகவு மெய்திடல் வேண்டும்.

மெய்யாக இவைமேதினியில் நிகழ வேண்டும்<br>
மீமிசை ஞாயிறு தலையாகப் பூமியாளும்

பொய்யான அரசருக்கோர் வார்த்தையினிப்<br>
பூதலத்தைப் புதுமையுறப் புரந்திடல்வேண்டும்.

பயனற்ற சட்டங்களை ஒழித்திடுவீர்<br>
பாரிற் புதுமைநலம் மிகக்காணும்

நலனுற்ற முறைநூல்கள் செய்திடுவீர்
நன்மை யெலா முலகத்துடைமையெனச் செய்வீர்.

நாளும் நல்லவர்கள் திருக்கூட்டம்
நலிவற்று வளர நாட்டில்மக்கள்

வாழும் முறைமையினை அவரோடு கூடி
வகையாக அறிந்து சிறந்திடல்வேண்டும்.

எழிலாக வளர்ந்திளமைநலம் மிகப்பெற்று
எடுப்பாக நிற்குமிளங் கன்னி தருமின்பம்

பொழில் நடுவில் எத்தகைத்தோ வத்தகைய
புதுமையின்பந் தரு செஞ்சொற் கவிதை மிக
வேண்டும்

# மதுரை நகர்

● சேமநிதிபோல் மேலெழுந்து
திசையெல்லாம் அருள்காட்டும்
தெளிவான கோபுரங்கள்

நாமகள்போய்க் குடியிருக்க
நயக்கின்ற தமிழ்ச்சங்கம்
நான்காம் புகழ்ச்சங்கம்.

பாமரரும் முனைமுறியாத்
தமிழ்பேசிப் பழகிவிட்ட
பண்பாட்டுப் பழக்கத்தால்

தேமதுரத் தமிழோசை
உலகமெலாம் பரவுவதற்குத்
தலைநகரம் மதுரையாகும் !

பிட்டுக்கு மண்சுமந்த
பெருமானின் பரம்பரைபோல்
இன்றெமது தெருவெல்லாம்

துட்டுக்கு மண்சுமக்கும்
சுமையாட்கள் சுமந்திருப்பார்
துயரங்கள் நெடுநாளாய்க்

கட்டுக் கடங்காத
சனப் பெருக்கால் கரிமேடு
நரிமேடு குளமெல்லாம்

பெட்டிக் கடைகள்போல்
வீடுகளாய் உருவாகிப்
புகலிடங்கள் தந்துவரச்

சங்கப் பலகையைப் போல்
ஆகிவிட்ட தற்காலத்
தமிழ் மதுரை நகரத்தில்

அங்கயற்கண் அம்மையொடு
சுந்தரரும் அறைகளில்தான்
வசிக்கின்ருர் இடப்பஞ்சம்!

எங்கேனும் வெளிப்போந்து
உலாவிடவோ இருவருக்கும்
திருவிழாக்கள் பலப்பலவாம்.

தென்காற் குளத்தருகே
பரங்குன்றில் திருக்குமரன்
முருகனுக்கோ மலைவாசம்!

திருமால் அழகர்மலைப்
பெருமாளும் தினந்தோறும்
மலைவாசம் என்பதனுல்

ஒருநாள் வெய்யிலினில்
உலவவிட்டே ஒறுப்பதற்குச்
சூழ்வினைபோல் சித்திரையில்

திருநாள் பெயர் சொல்லி
வரவழைத்துத் தென்மதுரைக்
கோடையினை அறிவிப்பார்.

மறுநாள் மீனாட்சி
திருமணத்தில் மனமகிழ்ந்து
தாரைவார்ப்பார் கள்ளழகர்!

மேங்காட்டுப் பொட்டலொடு மற்றோர் பால்
மேனாள் கதைநிகழ்ந்த கோவலன் பொட்டல்

தீங்கோட்டும் வணிகர் அந்திக் கடைப் பொட்டல்
தீர்மானமாயிப் பொட்டல்கள் நிறைந்திருந்தும்

பாங்கோடு வளங்காட்டும் தமிழ்வையை
பழங்கோலம் பூண்டுவிட்ட புதுமண்டபம்.

நீங்காமல் பலர்வந்து கண்டிருக்கும்
நிலையான திருமலையார் அரண்மனைகள்.

சிம்மக்கல் தமுக்கம் திசைதிரும்பித்
திகைக்க வைத்த யானைக்கல்

மென்மக்கள் இசைபொழிந்து கலைவளர்க்கும்
மேலான சங்கீதவி நாயகர்தெரு

நன்மக்கள் பலர் நிறைந்து வாழ்கின்ற
நாலாவணி மாசிவீதி யிவையெல்லாம்

ஜன்மத்துக் குயர்வளிக்கும் பெருமைமிகு
தமிழ் மதுரைப் பகுதியாகும் தகுதியாகும்.

பொதியமலேப் பிறந்தாலும் கூடல்நகர்ப்
புதுமையினில் நுழைந்துயர்ந்த தமிழ்த்தென்றல்

நதியருகே மாரியம்மன் குளத்தருகே
நடைபோடும் பெருமையினுல் சிறந்திருக்கும்.

மதிமயங்கிச் சொக்கவைக்கும் மல்லிகைப்பூ
மதுரமணி எம்மெஸ்ஸின் சங்கீதம்

முதிய புகழ்க் கொடைக்கானற் குறிஞ்சிமலர்
முற்றும் இவை எல்லாம் மதுரையாகும் !

# இன்னும் எதைத் தேடுகின்றேன்?

பச்சை மண்ணாய்ப்

பாலகனாக இருக்கையில் நான்

கச்சினைத் தேடிக்

கைகளால் வருடிப்

பசித்தே யழுதேன்

பாலினை உண்டேன்

நிசியினில் அயரநான்

நீந்தும் வயதினில்

தொட்டிலைத் தேடினேன்

தூங்கி அயர்ந்தேன்

பட்டினில் மெத்தையில்

பாடல்கள் கேட்டுக்

கண்களை மூடினேன்

கனவுகள் தேடினேன்

பெண்கள் கொஞ்சிடப்

பிள்ளையாய் ஆடினேன்.

மூன்று வயதினில்
முற்றமும் வாசலும்
ஊன்றி நடந்து
உருண்டு தவழ்ந்து

பொம்மைகள் தேடினேன்
பொலிபந்துகள் ஆடினேன்
கைம்மலர் சிவக்கக்
கண்களிற் பொத்திக்

கூடம் நெடுகிலும்
ஓடிப் பிடித்தே
தேடிய சிறுவரைத்
திகைத்திடச் செய்தேன்!

பத்து வயதினில்
பாலனாய் வளர்ந்தபின்
வித்தைகள் தேடினேன்
விவேகம் தேடினேன்!

மிட்டாய் ஐஸ்கிரீம்
மிகுசுவை இனிப்புகள்
பட்டால் சொக்காய்
பலவகை உடைகள்

எதையும் தேடினேன்
எல்லாம் அணிந்தேன்
கதையும் பாடலும்
கணக்கில கற்றேன்!

வாலிப வயதில்
வீதிகள் தோறும்
கோல விழிகளில்
குங்கும நெற்றியில்

சேலைகள் நிறம்தரத்
திரிதரு யுவதிகள்
வாலைகள் குமரிகள்
வருவதைத் தேடினேன்.

இருபது வயதினில்
இல்லறம் தேடி
வருபவள் துணையுடன்
வாடகை வீட்டில்

வாழ்க்கையைத் தேடி
மக்களைப் பெற்று
வீழ்ச்சிகள் பெருமிதம்
வேகம் தாமதம்

புகழ்கள் பழிகள்
கடன்கள் லாபம்
இகழ்ச்சிகள் ஏற்றம்
எல்லாம் தேடினேன்.

மக்கள் வாழ்ந்திட
மணவினை முடித்து
அக்கமும் பக்கமும்
அழைத்து நடத்திப்

பேரன் பேத்திகள்
　　பெரிதும் மொய்த்துத்
தாரம் பாட்டியாய்த்
　　தாத்தா நானுய்த்

தரணியில் என்கதை
　　தருகிற முடிவைச்
சுரணை யின்றியே
　　தேடியலுத்த பின்

இன்னும் தேட
　　எதுவோ மீதம்
இன்னும் தேட
　　எதுவோ மீதம்?

தேடலில் அலுத்தேன்
　　தேகமும் சலித்தேன்
ஓடமுடியாக் கால்களால்
　　உன்னையும் தேடவா?

தேடுவ தொன்றே நோயாகித்
　　திகைத்தும் வருந்தியும்
　　வாடினேன் என்னைத்
　　தேடிடும் காலனைச்
　　சேரும் முன்னதாய்

செகத்தினுள் தனியே
　　இன்னும் தேட எதுவோ மீதம்
　　இனியும் தேட எதுவோ மீதம்!

# வில்லன்

- பத்துத் தடவைகள்
  வில்லன் குத்திய
  வீரக் குத்துக்களில்
  சற்றும் அயராச்
  சரித்திர நாயகன்
  சற்றே மெல்லத்
  தட்டிப் பார்த்ததும்
  தடால் என விழுகிற
  வில்லனை இவர்கள்
  எங்கேயிருந்து
  தேடிப் பிடித்தார்?

# புதுக் கவிஞர் கண்ட பொதுத் தேர்தல்!

● பம்பரம்போல் சுற்றிவரும் பலகார்கள்
பலகாரம் தேநீர் பணப்பை

எம்பெருமான் படைத்தறியாச் சூழ்ச்சிகளும்
ஏராளம் ஏராளம் இடைமிடைந்து

தம்பெருமை வளர்த்திடவும் பிறர் பெருமை
தடுத்திடவும் இசைவான சொற் சிலம்பம்

அம்பலத்தே மேடையிட்டு ஆராரோ
அறைகூவிப் பேசிடுதல் இவையெல்லாம்

அம்புவியில் தேர்தல்நாள் அடையாளம்
'அய்யா வணக்கம் நினைவிருக்கட்டும்!

நம்புவியைச் சீர்த்திருத்தி நம்பகமாய்
நன்மைசெயத் தேர்தலுக்கு நிற்கின்றேன்'

வம்பறியாத் தொண்டுசெய முன்வந் தேன்
வாக்கெனக்குத் தரவேண்டும் நீரெல்லாம்

தெம்புடனே நானொருவன் ஜெயித்துவரத்
 தீருமுங்கள் துயரமெலாம்' எனக்கூறிக்

கைகூப்பல் புன்சிரிப்பு கண்கலங்கல்
 காலாற நடந்துவரல் பொதுப்பணிகள்

கையூட்டல் கூட்டங்கள் முடியுமட்டும்
 கடைசிவரை மேடையினில் காட்சிதரல்

பொய்யறியாப் பொதுத்தொண்டின் அவதார
 புருஷனைப்போல் வேஷமிடும் புதுக்கோலம்

மெய்யறிவு விளக்கங்கள் மேனாட்டு உதாரணம்
 மேற்கண்ட வகையெல்லாம் நடப்பதுண்டு

தேர்தல் முடிந்த பின்னே
 செலவுக்குக் கட்டும்வகை வென்றதனால்

யார்தலையிற் கைவைத்தால் லாபமாகும்
 யார்செலவிற் காரியங்கள் ஆகலாகும்

(என்றே)

ஊர்நடுவிற் பெரியவனாய் உலாவுதற்கு
 உதவியவர் பொதுமக்கள் என்றாலும்

கார்நடுவில் தனியமர்ந்து பவனிவரக்
 கருதுவதே வாழ்வாகி மறந்து போனார்.

(மே—1970)

# நானே ராஜா

- ரோஜாப்பூ மாலையுடன் மலர்ச்செண்டும்
  நீர்தந்தீர்! நல்வெள்ளிப் பேழையினில்

தேஜோமயப் பொற்சாவி யினைவைத்துத்
திறப்புவிழா நடத்துவதற்கு அழைத்திட்டீர்!

ஓகோவென் றுயரத்திற் பறக்கின்ற
உல்லாச விமானத்தில் தனியேவந்து

ஆகாவென்று அதிசயிக்கத் திறந்துவைத்தேன்
ராஜாக்கள் மானியத்தை ஒழித்துவிட்டேன்.

அரண்மனை பெரும்பூங்கா தனிவிமானம்
அந்தரங்கச் செலவினங்கள் சொந்தக்கார்

சரணடையும் பணியாட்கள் இவைஎல்லாம்
ஜனநாயக முறைப்படியே எனக்குவேண்டும்

முரணடையாக் கொள்கைவழி நடந்தாலும்
முதன்மைச் சுகபோகம் ஜபர்தஸ்து

பரணிபாடும் ஊர்வலங்கள் இவைஎல்லாம்
பகட்டுக் குறையாமல் எனக்குவேண்டும்.

ராஜாக்கள் மானியத்தை ஒழித்துவிட்டேன்
நாளைக்கே ஏழைகளைக் களிக்கவைப்பேன்

கூஜாக்கள் போலந்த ஏழைகளைக்
கூப்பிட்டே என்தன்னை வணங்கவைப்பேன்

'தேஜோ'க்கள் போலிங்கு பணம்சுருட்டிச்
சென்றுவிட்ட பேர்களையும் மன்னிப்பேன்—ஆயின்

ராஜாக்கள் மானியத்தை ஒழித்துவிட்டேன்—இனி
ராஜாவும் ராணியுமாய் நானுவேன்.

ஒருவகையில் மன்னர்களை ஒழித்து விட்டோம்
ஒவ்வொருத்தர் நெஞ்சினிலும் தலைப்பாகை

வரும்வழியில் கார்நிறுத்தி மாலைசூட
வருவோரை வழிநாடும் புகழாசை

தரும்பணத்தைப் பரிசாகத் தரவேண்டும்
தந்தவற்றைப் பொதுமக்கள் மறக்கவேண்டும்

எனும்நினைவு உள்ளவரை இந்நாட்டில்
இறவாமல் மறையாமல் மன்னருண்டு.

மந்திரிகள் அனைவோரும் ராஜாவாய்
மாண்பாகிக் கிரீடங்கள் பலசூடிச்

சொந்தநிலை மறந்தெல்லாச் சொகுசினுக்கும்

சுகபோகச் சுரண்டலுக்கும், ஊழலுக்கும்

எந்தமது வரிப்பணத்தைச் சூறையிட்டு

இங்கேயும் அங்கேயும் பறந்துவரும்

இந்தநிலை தனைக்கண்டால் தோன்றுதோ

'இவரன்றோ புதுமன்னர் பொதுமன்னர்.'

(ஜனவரி—1971)

# வென்றாலும் தோற்றாலும்

- போடா போ தேர்தலில் நான் வென்றிடுவேன்
  பொல்லாத வேளையினால் தோற்றிடிலோ

சோடாக்கள் கல்லெறிகள் செய்திடுவேன்
  தோல்வியினை மதிக்கமாட்டேன் சகிக்கமாட்டேன்

காடா மல் துணிவாங்கிக் கொடி எழுதிக்
  கைவலிக்கச் சுவர்முழுவதும் தமிழ் எழுதிப்

போடாபோ தேர்தலில் நான் வென்றிடுவேன்
  பொல்லாத வேளையினால் தோற்றிடிலோ

சோடாக்கள் கல்லெறிகள் செய்திடுவேன்!

எதிராளி வேட்பாளர் கொடிகளைநான்
  இழுப்பதற்கும் பறிப்பதற்கும் கிழிப்பதற்கும்

அதிரடியாள் படையொன்று வைத்திருப்பேன்
  ஆகாதார் கூட்டத்தைக் கலைப்பதற்காய்ப்

பொதிமாடு பன்றியுடன் கழுதைகளைப்
புகுத்திவிட்டுப் பயப்படுத்தல் நானறிவேன்

அதிசயமாய்த் தேர்தலில்நான் வென்றிடுவேன்
அல்லாமற் போயிடிலோ கல்லெறிவேன்!

ஓட்டெல்லாம் எனக்கெதிராய்ப் போட்டுவிட்ட
'உலுத்தர்களை' வீடு மட்டும் உட்புகுந்து

ஆட்காட்டிப் பயமுறுத்தி அழவைப்பேன்
அடி உதைகள் செய்பவர்கள் எண்ணிக்கை

'டாப்'லிஸ்டில் இருப்பதுதான் எம் கட்சி
தடியர்படை குடியர்படை சாணியடிப்

போர்வீரர் எல்லாரும் எங்கள்படை
சரிந்து விட்டால் கல்லெறிவோர் எங்கள்படை!

மாற்ருர்கள் கூட்டமெலாம் நடக்காமல்
மாட்டிவைக்கும் வழியனைத்தும் நானறிவேன்

ஆற்றலிஞல் பலலட்சம் மக்களெலாம்
அந்த மாற்ருர்க்குக் கூடிவிட்டால்

மேற்றிசையில் மின்சார மெயின் சுவிட்சை
மூட்டுடைத்தே இருள்வெள்ளம் மூழ்கவைப்பேன்

காற்றடிக்கும் வேகத்தில் கல்லடிப்பேன்
கைகாலை வெட்டுதற்கும் சொல்லிவைப்பேன்.

ஜனநாயகம் சமதர்மம் நல்லாட்சிச்
சாதனைகள் இவையெல்லாம் நானறியேன்

பணநாயகப் பதவிகளாம் அத்தனையும்
பறிப்பதற்கும் வகிப்பதற்கும் நானறிவேன்

குணநாயகப் பண்பாளர் ஆட்சிவந்தால்
குன்றிவிடும் என் வலிமை என்றென்றும்

எனுமோரகக் கருத்ததனுல் தோற்றிடினே
எங்களவர் கல்லெறிவர் சொல்லெறிவர்.

போடாபோ தேர்தலில்நான் வென்றிடுவேன்
பொல்லாத வேளையினுல் நான்தோற்றிடிலோ

சோடாக்கள் கல்லெறிகள் செய்திடுவேன்
சோதாக்கள் ரௌடிகளும் குண்டர்களும்

காடாய்ப் பெருகிவளர்கின்ற கட்சியெங்கள்
கட்சியாகும் என்பதனுல் தேர்தலின்பின்

ஏடாஎதிராளீ! நாங்களெல்லாம் தோற்ருலும்
எறிவதற்குக் கற்களுண்டு சோடாவுண்டே!

(மார்ச்—1971)

## இங்கே வந்து ஏன் பிறந்தீர்?

ஏரோப்ளேன் ஏறிவந்து நாகுக்காய்
இறங்கியதும் மலர்மாலை புகைப்படங்கள்

காரோட்டம் மலர்க்கிரீடம் என்றெல்லாம்
கலைகலப்பாய்ப் புகழ்வேட்டை ஆடிவிட்டு

போராடும் மக்களுக்குப் புதுவாழ்வும்
பொதுவான சமதரும நன்மைகளும்

தராாளமாய்த் தருவதற்கே நான்பிறந்தேன்
தயங்காதீர் என்றுரைக்கும் தன்னலத்தார்

மாருட்டப் பேர்வழிகள் மதியிலிகள்
மனச்சாட்சிப் பெயர்சொல்லி இந்நாட்டை

வேரோடு சாய்த்திருப்பார் இவரெல்லாம்
வீணுக்குப் பிறந்தழிக்கும் இம்மண்ணில்

ஓராடை முழந்தாளின் மேலுடுத்த
உத்தமராய்ச் சத்தியமாய்ப் பேரொளியாய்

நீர்ஐயா திருத்தவத்தீ ரிங்கிருக்கும்
நிலையறியா தேன் பிறந்தீர் இந்நாட்டில்?

நீர் பிறந்தீர் என்னுமொரு நினைப்பல்லால்
நினைப்பதற்கு வேறெதுவும் இந்நாட்டில்

ஓரணுவும் மீதமில்லை இந்நாளில்
உத்தமரே தவஞான உள்ளொளியே

வேரளவும் அழுகி விட்டோம் முழுகிவிட்டோம்
வீணர்களைப் பதவிகளில் அமரவைத்து

ஓரளவும் பயனின்றி ஒடுங்கிவிட்டோம்

ஒற்றுமையோ புரிந்துணர்வோ சிறிது மின்றி

நீரளித்த சுதந்திரமாம் நற்பொருளை
நீசருக்குப் படைத்துவிட்டோம் மகாத்மாவே!

போரெடுத்துப் பெற்றபெரும் வெற்றியினைப்
புல்லருக்கு அடகுவைத்தோம் மகாத்மாவே!

யாரெதிர்த்து வந்தாலும் வலிமையின்றி
அவர்க்கடிமை யாகிவிடும் காரணத்தால்

சீரிழந்த நாடாகித் தவிக்கின்றோம்
தெய்வமே இங்குவந்து ஏன்பிறந்தீர்?

எல்லோரும் உடுப்பதற்குத் துணியில்லா
இந்நாட்டில் யானணிவேன் அரையாடையென்

றில்லார்க்குப் பிரதிநிதியாய் நீரிருந்தீர்
இந்நாளில் மந்திரிகள் என்றிருப்பார்,

பல்லோரும் பேசுவது சோஷலிஸம்
போடுவது பகல்வேஷம் தினவெளிச்சம்

உல்லாச மாளிகைகள் ஏர்க்கண்டிஷன்
உயர்வகுப்பிற் கோமான்போல் பயணங்கள்

சொல்லாமல் கொள்ளாமல் பழங்காலச்
சுகவாசி மன்னர்களை ஒழித்துவிட்டு

வல்லாண்மைத்திறத்தாலே இவரெல்லாம்
வாழ்கின்றார் புதுமன்னர் சுகவாழ்க்கை

எல்லார்க்கும் சமதர்மம் வரவேண்டி
இதயமெலாம் நெக்குருகும் மாத்மாவே

கொல்லாமை சத்தியத்தைக் குறிக்கோளாய்க்
கொண்டிருந்தும் ஏன்பிறந்தீர் இந்நாட்டில்?

சொத்தாண்டு சுகம் ஆண்டு பதவிகளில்
சுவைவேண்டி மகிழ்ந்தறியாப் பெருமுனிவர்

பத்தாண்டுக் காலம்வரை மறதியினால்
பலவருமான வரிகட்டத் தவறிவிட்ட

முத்தான மந்திரிகள் மூத்திருக்கும்
மூளித் தனங்களினால் கறைபட்ட

இத்தேச நிலைமைகளை என்றேனும்
இழிதகைமை மாற்றிடக் கருதிவிட்ட

உத்தேசம் உமக்கிருந்தும் மகாத்மாவே
உதவிக்கு நன்றியில்லாச் சிறுநாட்டில்

இத்தரையில் நீரிருந்தீர் என்பதனை
என்றைக்கோ மறந்துவிட்ட களிமண்ணில்

பத்தரை மாற்றுத் தங்கமே

பழுதறியாப் பெருங்கருணை வள்ளலே
எத்தனை காலமோ செய்த புண்ணியங்கள்

இருந்தாலும் ஏன்பிறந்தீர் இந்நாட்டில்?
தேசம்பெரிதென் றெண்ணியவர் அந்நாளில்

தேசத்தைக் காப்பதற்காய்த் தம்நலங்கள்
நேசமெல்லாம் தியாகமென நேர்ந்திட்டார்

நீரளித்த பிச்சையாகும் சுதந்திரத்தை
நீசமதியிலிகள் இந்நாளில் இந்நாட்டில்

நெடும்பதவி யென்னுமொரு மோகத்திற்
தேசத்தை விலைகொடுத்தும் அடைகின்ருர்

தெய்வத்தை விலைபேசித் தேவைகொளும்
மோசத்தை யத்தனையும் பார்க்குங்கால்

மோகனதாஸ் காந்தியெனும் மகாநதியே!
காசைத் தொழுவதன்றி வேறறியாக்

கயவர் பெருத்துவிட்ட இந்நாட்டில்
தேசத்தைப் பக்திசெயாப் புல்லரிடைத்

தெய்வம் நீர் இங்கு வந்து ஏன்பிறந்தீர் ?
நீரொருவர்பிறவாமலிருந்திருந்தால்

இந்நிலையை நினைப்பதற்கும் புத்தியின்றி
வேறொருவர் சொன்னாலும் தெரியாமல்

விலங்குகளாய் மந்தைகளாய் வாழ்ந்திருப்போம்
பேரொளியே நினைப்பதற்குத் தூண்டிவிட்டீர்

பின்னாளில் நடப்பதெல்லாம் பார்த்தாலோ
சீரழிய வழிவகுக்கும் இந்நிலைமை

சீக்கிரமாய் வருமுன்னால் நாங்கள்
ஓரறிவும் வளராமல் போம்படியாய்

உத்தமரே நீரிங்கு பிறவாமல்
வேறெங்கோ பிறந்திருந்தால் பழியில்லை

வித்தகரே ஏன்பிறந்தீர் இந்நாட்டில்
நீர் பிறந்த காரணத்தால் சிந்திக்கும்

நிலைமையினைப் பெற்றுவிட்டோம் சிந்தித்தால்
யார்பிறந்தும் திருத்தவொணா இந்நாட்டில்

அடிகள் நீர் ஏன்பிறந்தீர்? ஏன்பிறந்தீர்?

(அக்டோபர், 1970)

# ஆசைகள்

ஆதிநாள் முதல்—என்
      ஆசைகள் பலப்பல—இனி

மீதிநாளில்—அவை
      பலித்திடல் வேணும்—ஒரு

பாதி யளவாதல்—மனப்
      பசிகள் தீரச்—செயல்

சாதக மாகி—என்
      சரித்திரம் எழுதிட—இங்கு

ஆதிநாள் முதல்—என்
      ஆசைகள் பலப்பல—பெருங்

காசுகள் பணங்கள்—என்
      கைகளில் நிறையப்—பல

ஏதிலர் உறவினர்—என்
இதயம் கவர்ந்தவர்—நலம்

யாதினும் உயர்ந்திட—அவர்
நினைத்தது நடந்திட—நம்

ஊதியம் வளர்ந்து—நல்
உலகினில் கிளர்ந்து—வரும்

தேதியும் நிமிஷமும்—பல
செல்வமாய்ப் பெருகிட-இங்கு

ஆதிநாள் முதல்—என்
ஆசைகள் பலப்பல.

# நாற்காலிகளும் மனிதர்களும்

● சில நாற்காலிகள் நல்லவையாயுள்ளன
அவற்றில் அமரும் மனிதர்களைக்

கழித்து விட்டுக் காணும் போது.
வேறு சில மனிதர்கள் நல்லவர்களாயிருக்கிறார்கள்

அவர்கள் அமரும் நாற்காலிகளைக்
கழித்து விட்டுப் பார்க்கும் போது.

மனிதர்களும் நாற்காலிகளும் சேர்ந்தே
மாண்புடனிருக்கும் உதாரணங்களை

எத்தனை தேடினாலும் கிடைப்பதில்லை.
சில நாற்காலிகளில் ஏதோ கோளாறுகளை

அவற்றில் அமரும் சிலர் உண்டாக்கி
விட்டு விடுகிறார்கள் போலும்.

சில மனிதர்களில் ஏதோ கோளாறுகளை
அவர்கள் அமரும் நாற்காலிகள்

உண்டாக்கி விட்டுவிடுகின்றன போலும்.
எவ்வளவோ முயன்றும் நாற்காலிகளையும்

மனிதர்களையும் சேர்த்துக் கணிப்பதோ,
புரிந்து கொள்வதோ சிரமமாயிருக்கிறது.

கோளாறு எங்கே என்று தேடினேன்.
கால்களில் என்பது எண்ணிப்புரிந்தது.

இரண்டுகால் நாலுகாலில் அமர்ந்தால்
சகவாச தோஷ மாகிறது.

நாலுகால் இரண்டுகாலை உட்கார
விட்டாலும் சகவாச தோஷ மாகிறது.

இது மேல் மாருட்டமா? கால் மாருட்
டமா அல்லது ஆள் மாருட்டமா?

# புதியன் திரும்பிவிட்டான்

காதுகள் இருந்தும் கேளாமல்
கண்கள் இருந்தும் பாராமல்
வீதிகள் இருந்தும் நடவாமல்
விவேகம் இருந்தும் புரியாமல்
பேதைகள் நிறைந்த பொதுவினிலே
புதியவன் ஒருவன் வந்து நின்ருன்
சாதிகள் மறைந்த சமதர்மம்
சத்தியம் மிகுந்த பொதுத் தொண்டு
நீதிகள் அறிந்த பெருநெஞ்சம்
நேர்மைகள் தெரிந்த மரியாதை
வேதியர் அறியா மெய்ஞ்ஞானம்
மிகவும் மலர்ந்தே சிரித்த முகம்
யாவையும் இருந்தும் கொன்று விட்டார்
யாதும் அறியா மந்தையிலே-இப்
பூமியில் வந்தது பிழை என்றே
புதியவன் திரும்பிப் போய் விட்டான்!

# நீங்கள் ஆக்கிய 'நான்'

● ஆஸ்திகர்கள் எல்லாரும் ஒன்று சேர்ந்தே
அக்கறை காட்டி என்னை நாஸ்திகன் ஆக்கினீர்!

வசதியுள்ளவர் யாவரும் ஒன்று சேர்ந்தே
வம்புக் கிழுத்து வம்புக் கிழுத்தே என்னை

வசதியற்றவர்களின் தோழனாய் ஆக்கிவிட்டீர்!
நிறுவனங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்தே

நித்த நித்தம் முயற்சி செய்தே என்னை
நிறுவனங்களின் எதிரியாய் ஆக்கிவிட்டீர்!

பயந்தவர் எல்லாரும் ஒன்று சேர்ந்தே
பயமுறுத்திப் பயமுறுத்தி மிரட்டியதால்

என்னை நிர்ப்பயமானவன் ஆக்கிவிட்டீர்!
கட்சிகள் எதுவு மற்றிருந்த என்னைக்

கட்சிகட்டிக் கட்சி கட்டிக் கங்கணம் கட்டி
எதிர்த்தெதிர்த்தே ஒரு கட்சியாய் ஆக்கி விட்டீர்!

சும்மா இருந்த என்னை நீங்கள்
சுற்றிச் சுற்றி வம்புபேசி முடிவில்
இம்மாம் பெரிய புரட்சிக்கார னென்றீர்!
தொண்டர்கள் தொண்டனாய் இருந்த என்னைச்
சும்மா இருக்கவிடாமல் தலைவன் ஆக்கிவிட்டீர்!

# நிர்ணயம்

● இருபதாம் நூற்றுண்டின்
பாவ புண்ணியங்களைப்

பெரும் பான்மை சிறுபான்மையால்
மனிதர்களே நிர்ணயிக்கிருர்கள்

குற்றம் நிரூபிக்கப்பட்ட நிரபராதிகள்
விசாரணைக்குப் போகிருர்கள்

நிரூபிக்கப்படாத குற்றவாளிகள்
தொடமுடியாத உயரத்தின் மேல்

பதவிகளிலே இருக்கிருர்கள்
சாட்சியில்லாத உண்மைகளைப்

பொய்களாகச் சித்திரிக்கிருர்கள்
சாட்சியுள்ள பொய்களையே
உண்மைகளாகக் காட்டுகிருர்கள்
ஆம்!

இருபதாம் நூற்றுண்டின் பாவபுண்ணியங்களைப்

பெரும் பான்மை சிறு பான்மையால்

மனிதர்களே நிர்ணயித்து விடுகிருர்கள்.

ஓட்டு அதிக முள்ள பொய்யே மெய்

ஓட்டு அதிக மில்லாத மெய்யே பொய்!

# நீல நயனங்கள்

கால நெடுமையெனும் எழில் தவத்தில்
　　கருவிருந்தே பிறந்து வந்தாள்

கோல மதிமுகத்திற் சுரிகுழலில்
　　குங்குமச் செம்பொன் நெற்றியினில்

நீல நயனங்கள் இரண்டாலும்
　　நீட்டி அளந்து பார்க்குங்கால்

பாலிற் புரள்கின்ற கருநாவற்
　　பழத்தைப் போலும் நோக்குடையாள்.

பார்த்தே பேசும் பக்குவக் கண்கள்
　　பார்வையிற் பேசும் பரிமளவிழிகள்

ஊர்த்தேர் வீதியில் வருதல்போல்
　　ஊரே காண வருகின்ருள்

ஆர்த்தே ஒலிக்கும் காற் சலங்கை
　　யாரிவள் யாரிவள் எனவியக்கப்

பார்த்தோர் தவிக்கப் பாரார் ஏங்கப்
　　பார்வையே பேசும் மோகன விழிகள்!

# குப்பையும் மந்திரியும்

முதல் நாள் பேப்பரில் முதற்பக்க விளம்பரம்
　　தெருச்சுவர் எல்லாம் தடித்தடி எழுத்தில் போஸ்டர்

போட்டோ கிராபர் நிருபர்கள் புடை சூழ
　　மந்திரி ஒருநாள் தெருவைப் பெருக்கினார்

மக்களும் சேர்ந்து துடைப்பம் பிடித்தனர்
　　மறுநாள் காலை மக்களும் மறந்தனர்

மந்திரியும் மறந்தார் தெருவும் மறந்தது
　　மந்திரியோடு குப்பையும் துடைப்பமும் படத்தில்
　　வந்தன.

மறுபடி பெருக்க மந்திரி வரும்வரை
　　குப்பைகள் தெருவில் சுதந்திரமாகக் கூடின

தெருவை விட்டுச் செல்லுவதில்லை என்றே
　　குப்பைகள் எல்லாம் கூடிக் கூடித்

தெருவே குப்பையாய் மூடித் திளைத்த பின்னர்
　　கொசுக்கள் மொய்த்தன ஈக்கள் எழுந்தன

அழுகலும் நாற்றமும் ஆளேத் துரத்தின
பேப்பர் விளம்பரம் பெரிதாய்ப் போஸ்டர்

போட்டோகிராபர் டிவி காமிரா நிருபர்கள் சூழ
மறுபடி பெருக்க மந்திரி வரும்வரை

தெருவை விட்டுச் செல்லுவதில்லே என்றே
குப்பைகள் ஒன்ருய்க் கூடி இருந்தன

குப்பைகள் என்ருல் ஒன்றும் கேவலமில்லே
குப்பைகளுக்கும் உண்டிங்கே சுயமரியாதை

குடும்பம், ஒற்றுமை குழந்தை குட்டிகள் எல்லாம்
எப்படி யாயினும் அவற்றுக்கும் உண்டுதான்,

மந்திரி வந்தால்தான் இனி அவை மதித்துப் புறப்படும்!

# டிசம்பர் மாதத்துத் திவசம்

சங்கீத சபைகளிலே பலர் கூடி
    சாஸ்த்ரீய இன்னிசையை

இங்கிதமாய்ப் பாடிப் பேசி
    எடுத்துரைத்துக் கொண்டாடும்

மங்காத டிசம்பர் மாதந்தான்
    மகத்தான இசைக்கலையை மற்

றெந்நாளும் மறப்பதற்காய் வசமாக
    இந்நாளில் கொண்டாடும் திதியாகும்.

பாட்டறியாப் பட்டினத்து வியாபாரிகள்
    பக்கத்திலமர்ந்து தலையாட்டி

கேட்டறியா ஊர்வம்பு பலப்பலவும்
    கிளந்திடவும் அளந்திடவும் ஏற்ற

கோட்டமென இசையரங்கு பயனுகும்
    குமரிகளும் கிழவிகளும் அணியணியாய்

லாக்கரிலே தூங்கும் நகைபூட்டி
‘வாக்’ காக வருகின்ற காரணத்தால்

வனப் பரங்காய் மாறிப் போய் அங்கே
வகைவகையாய்ப் பட்டுச் சேலைகளும்

மெனக் கெட்டுப் பிறர் பார்த்து மெச்சுதற்கு
மேன் மேலாய்ப் போட்டுவந்த நகைகளுமே

கணக்கிட்டுப் பிறரைக் கவர்வதனுல்
காண்கின்ற சங்கீதக் கவனத்தால்

பணக் கட்டுத் தளராத இரசிகரிலே
பார்ப்பதுவும்பே சலுமே இசையாச்சு!

# எங்கள் தெருவிளக்கு

இருட்டில் எரிவதுதான் எங்கும் விளக்காகும்
இருட்டை விலக்கும் அதுவே விளக்கென்பார்
எங்கள் தெருவிளக்கோ இதற்கெல்லாம் விதிவிலக்கு
வீதி விளக்கல்ல இது வெறும் விதிவிலக்கே!

பவுர்ணமி இரவிலே பளிச்சென் றெரியும்
அமாவாசை இரவிலோ அழுது வடியும்
இருளில் இருளோடு சேர்ந்து ஒத்துழைக்கும்
ஒளியில் ஒளியோடு சேர்ந்து ஒத்துழைக்கும்

ஊருக்கதனல் வேறு வகையில் உதவிகள் உண்டு
கட்சிகள் தோரணம் கட்ட அது கம்பமாகும்
பட்டம் விடுகிற சிறுவர்கள் மஞ்சாக் கயிறு
பட்டு மாட்டி வதைத்திடும் போதில் வம்புமாகும்

கிட்டுக் கோனர் வசமாய் எருமையைக்
கட்டிக் கறக்கையில் அதுகட்டுத் தறியாம்
பட்டப் பகலில் வீணய்த் தெருவைச் சுற்றும்
பக்கா ரௌடி பரமசிவம் பக்குவமாகச்

சாய்ந்தே நின்று வருவோர் போவோரனைவரையும்
மாய்ந்து மாய்ந்தே வம்புக் கிழுக்கும்
சண்டைக் களமும் சரியாய் அதுதானும்
சாகஸ மேடையும் சதியரங்கும் அதுவேயாம்

வருடம் முழுவதும் கூட்டிக் கழித்து
எரிதல்—எரியா—நாட்களை எண்ணிப் பார்த்தால்
இருளில் எரிந்தது இரண்டொரு நாளே
விளக்கைத் தவிர வேறெல்லா மாகும்

விளக்காய் மட்டும் ஆனது குறைவு
பேரால் மட்டுமே அது தெரு விளக்கு
பேருக்கு மட்டுமே அது ஒரு விளக்கு
ஊருக் கிதனுல் ஒளியுமில்லை உதவியுமில்லை

இருளை விலக்குவதே தெருவிளக் கென்று
இலக்கணம் எழுதிச் சொன்னாலும்
எங்கள் தெருவிளக்கு இதற்கொரு விதி விலக்கு
வீதி விளக்குக் குறிலாகி ளகரமும் லகரமாய்

விதி விலக்காகி நிற்பதே நடைமுறை
வல்லார் திருவள்ளுவர் வரைந்த குறள் நூலில்
'எல்லா விளக்கும் விளக்கல்ல' என்றிட்டார்

பாதிவரை அக்குறளைப் படித்தறிந்த காரணத்தால்
எங்கள் தெருவிளக்கு எந்நாளும் எரியாது
இந்த விளக்கு எந்த வகைக்கும் ஒரு விதிவிலக்கு!

# எங்கள் இந்தியா

● எங்கள் இந்தியா! ஆம்! இது எங்கள் இந்தியா
மியூஸியங்களும் மிருகக் காட்சிசாலைகளும்
மிகுந்த இந்தியா

சீர்திருத்த வாதிகள் சிலரும் செப்பிடுவித்தைக்காரர்கள்
பலரும் செறிந்த இந்தியா
தியாகிகள் சிலரும் திருடர்கள் பலரும்
நிறைந்த இந்தியா

சத்தியம் என்றொரு பொருளினை அலங்கரித்தே வெறும்
சாட்சியாய்க் கூண்டில் பூட்டி வைத்தோம்
காந்தி என்றொரு மகாத்மாவைக் காட்சிப் பொருளாய்க்
காட்டி வைத்தோம்

சுவர்களில் எல்லாம் மாட்டி வைத்தோம்
நேரு என்றொரு மானிடநேயர் தம்மை
நித்தம் பேசியே அலுத்து விட்டோம்

மாநில வாரியாய்க் கட்சிகள் தாவும்
மாபெரும் இந்திய அரசியல் சர்க்கஸ்
புதியதோர் அற்புதம் பெரியதோர் அதிசயம்

நல்லவை எல்லாம் வெறும் காட்சிப் பொருளாய்
நடை யிழந்திருக்கத்
தீயவை எல்லாம் சேர்ந்து எழுந்தே
தெருவினில் இயங்கிப் 'பரவும்

படைகளாய்' வளர்கிற பாரத தேசம்
பதவியே சுகமெனப் பரமானந்தத் திளைப்புடனிருக்கும்
பஞ்சணை வாசிகள் கொஞ்சி மகிழும் பாரததேசம்
முப்பது வருடம் சுதந்திரமாக வாழ்ந்த பின்னும்
தண்ணீர் குடிக்கத் தவிக்கும் ஏழைகள்

கண்ணீர் வடிக்கும் கவலைகொள் தேசம்
உண்ணச் சோறும் உடுக்கத் துணியுமின்றி
எல்லா நவீன வசதிகளும் இங்கு தாராளம்
விஞ்ஞான முன்னேற்றமோ மிகவும் ஏராளம்

'சாரா ஜஹாம்ஸே அச்சா இந்துஸ்தான்'
குடிக்க நீரும் வசிக்க இடமும் தான்
குடிமக்கள் அனைவருக்கும் கிடைக்கவில்லை

கலர் டெலிவிஷன் கம்ப்யூட்டர்கள் சூப்பர் ஜெட்
விமானங்கள்
விண்வெளி ஆராய்ச்சி மண்ணடி வளம்தேடல்
எல்லாம் வளர்ந்து இன்னும் வளர்கிறோம்
எதற்கும் குறைவில்லை எதற்கும் குறைவில்லை

கங்கையும் யமுனையும் கலந்து பாய்ந்தும்
காடும் மலைகளும் கணக்கற் றிருந்தும்
தண்ணீர்ப் பஞ்சமும் வெள்ளக் கொடுமையும்
சரிசமமாக உயிர்களைப் பலிகொளல் இங்கு சர்வசா
தாரணம்

உண்ணச் சோறும் உடுக்கத் துணியும்
கண்ணியமாகப் பார்த்திட வேலை என்றென்றும்
கனவில் கூடப் பெறமுடியாத காவியபூமி

''பாரத பூமி பழம்பெரும் பூமி
நீரதன் புதல்வர் இந்நினைவகற் றுதீர்''
இந்தியா எங்கள் இந்தியா ஆம்இது எங்கள் இந்தியா
மனிதர்களைக் காட்டிலும் மனிதர்களைப் பார்க்கிலும்

மியூஸியங்களும் மிருகக் காட்சிசாலைகளும் மிகுந்த
இந்தியா
செத்த காட்சியும் உயிர்க்காட்சியும் சேர்ந்த இந்தியா!

(1982)—

# ரேட்

● ஐம்பது பைசா டீக்காசில் கூலியாள்
ஐந்து ரூபாயில் கீழ்நிலை ஊழியன்
ஐம்பது ரூபாயில் அதிகார மேல்மட்டம்
ஐந்நூறு ரூபாயில் வட்டக் கவுன்ஸிலர்

ஆயிரம் ரூபாயில் தொகுதி எம். எல். ஏ.
ஐம்ப தாயிரத்தில் எம். பி. மாண்புமிகு
இலட்சம் கோடிகளில் மிகப்பெரிய முதல்மாண்பு

என்று ஏதேதோ விவரத்தைப் பைத்தியம்போல
என் நண்பன் உளறினான் செவி மடுத்தேன்
என்னப்பா இதெல்லாம் முடிவாகி அறிவித்த
ரேட்டைப் போல் டாரிஃப் கார்டா? என்றேன்

நாட்டில் பலரை ஆட்டிப் படைக்கும்
நம்பகமான 'மார்க்கெட் நிலவரம்' என்றான்
என்னப்பா அதிகம்சொல்லுகிறாய்? எனக்கேட்டேன்

விலை வாசி எல்லாமே ஏறிப் போச்சு
கத்திரிக்காய் ஒருகிலோ நாலுரூபாய்
தொலைபேசி ஒருகால் ஒண்ணேகால் ரூபாய்

கட்டுபடி யாகணுமே என்றான் கவலையுடன்
கோடியும் லட்சமும் கொஞ்சமாய்ப் போனது
வாடிக்கை என்றான் வகையாக உளறினான்
'கடமை கண்ணியம் கட்டுப்பாடு' என்றேன்

அதற்கும் இங்குநல்ல விலை உண்டென்றான்
இதற்குமா விலையென் றேக்கத்தோடு கேட்டேன்
இதற்கு மட்டுமென்ன எதற்குந்தான் என்றான்

வரவர நண்பன் பலபொய்களைச் சொல்வதாய்
நானே நம்பி என்னைத் தேற்றிக் கொண்டு பின்
தேறினேன் வேறென்ன செய்ய இங்கே?

# சுமைதாங்கிக் கல்

## அன்று

● எங்கள் ஊரில் ஒரு பழைய சுமைதாங்கி
ஊருணிக் கரையில் சாலை முனையில்
சேரத் தழைத்த ஆலமரத் தடியில்
'ப'வைக் கவிழ்த்தது போலப் பழையநாள்

கருங்கலில் வடிவாய்ச் செதுக்கிக் கட்டியது
'மாணுக் காணு' உபயம் என்றதில் எழுத்தும் உண்டு
ஊருக்குள் தேடி வருவோர் போவோர் பாதசாரிகள்
பாரம் சுமப்போர் பசித்தோர் வருந்தியோர் முன்பெலாம்

சுமையை இறக்கிச் சற்றே இளைப்பாறிச்
செல்ல ஆலமரமும் அருஞ்சுமை தாங்கியும்
ஊருணி நீரும் ஒன்றுக்கொன்று அருகருகாக
யாரும் விரும்பிட அமைந்து திகழ்ந்தன

## இன்று

ஊருணி வற்றித் தூர்ந்தது வறண்டது
மரம் நடு விழாவுக்கு மறுநாள் காலை
ஆலமரத்தை யாரோ வெட்டி விறகாய் விற்ருர்
மரத்தடி இருந்த மாமூல் இடத்தில்

சுமைதாங்கி இருந்தது சுமையும் இல்லை
சுமப்போரும் இல்லை கைப்பையுடன் வந்தே
கடுகி விரைந்து பஸ்ஸில் ஏறினர்
வழி நடைப் பயணம் மூட்டை முடிச்சு

பாரம் சுமப்பது எல்லாம் பழங்கதையாச்சு
களத்து மேட்டுக் கள்ளுக் கடையினில்
வாடிக்கைக் குடிகாரன் வடிவேலுக் கொத்தன்
தேடி வந்து தூங்கும் மேடையாகி

எங்கள் ஊரின் சுமைதாங்கிப் பழங்கல்
இன்று தாங்கும் சுமைகள் மூன்றே மூன்றுதான்
ஒன்று வடிவேலுக் கொத்தனின் உடம்பு
மற்ருென்று அவன் உடலுக்குள் ஓடும் சாராயம்
மூன்ரும் சுமை கவலை—சுமக்க வேறு சுமைகளே இல்லையே
என்பது!

# பன்மொழிப் புலவர்

- பேட்டை ரவுடி பெருமாள் சாமிக்கு
நாட்டு மொழிகளில் தமிழே தகராறு
காலை முதலாய் மாலை வரையும்
இதுதான் உண்மை இதுதான் உண்மை

அந்தி மயங்கும் வேளையில் தினம்தினம்
ஆவாரம் பொட்டல் சாராயக் கடைக்குள்போய்
சாவாசமாகப் பலமில்லிகளை உள்ளே தள்ளிய பின்போ
வேறு நிலைமை வேறுபுலமை எல்லாம் விளங்கும்

இங்கிலீஷ் தமிழ் இந்துஸ்தானி இன்னும்
என்னென்னமோ பாஷைகளில் திட்டும் வசவும்
சில வேளைகளில் 'செட்டுச்செட்டாய்' அடுக்கிவரும்
போதை தணிந்து பொஸிஷனுக்கு வரும்வரை

மேதை பெருமாள் சாமியும் பன்மொழிப் புலவனே
பல மொழி வித்தகன் பயப்பட வேண்டியவன்
ஏனெனில் பற்பல வேளைகளில் இங்குநான்
பயப்படும் நபர்களில் விதம் விதமாகப் பேசுவோர்

பலமொழிப் புலவோர் 'பட்டை'யடிப்போர்
யாவரும் அடங்குவர் அதனால் பணிவுடன்
பேட்டை ரவுடி பெருமாள் சாமியும் நான்
பயப்படும் லிஸ்டில் அகப்படும் ஓராள்

விலகி நின்று வேற்றாள் போல் வணங்கிப்
பன்மொழிப் புலவர்களைப் பணிந்து ஒதுங்கலே
நன்னெறி என்று நம்பிடும் பேதை நான்
பேட்டை ரவுடி பெருமாள் சாமியோ

அந்திக்கு மேலே அரையாடை சரியப்
புரியாத மொழிகளுடன் சந்திக்கு வருமோர்
சரித்திர நாயகன் சகலபாஷா ஞானி!

# சாலை விதிகள்

● இந்த நூற்றுண்டின் இந்திய இளைஞனே!
இப்போது நீ எந்த இடத்தில் நிற்கிருய்?

ஆன்மீகத்துக்கும் விஞ்ஞானத்துக்கும் நடுவிலா?
அறியாமைக்கும் அறிவுக்கும் நடுவிலா?

நேற்றைய அவநம்பிக்கைகளுக்கும்
இன்றைய சிரமங்களுக்கும் நடுவிலா?

நீ நிற்கும் இடம் உனக்குப் புரிகிறதா?
அவநம்பிக்கைகள்தான் உன் முன்னோர்

உனக்கு அளித்த பிதிரார்ஜிதங்களா?
சிரமங்கள் தான் நீ உனக்கென்றே

தேடிக் கொண்ட புதுச் சொத்துக்களா?
நீ நிற்கும் இடம் உனக்குப் புரிகிறதா?

சாலை விதிகளைச் சரியாகப் புரிந்துகொள்!
சாலைகளின் நடுவே நிற்கக்கூடாது!

நடுவே நிற்பவர்கள் எப்போதுமே விபத்துக்
குள்ளாகிருர்கள்
நடுவில் நிற்காதே பின்னுலும் போகாதே

முன்னேறிவிடு உன் முன்ஞல் வழிகள் தெளிவாயுள்ளன
நடுவில் நிற்காதே பின்னுலும் போகதே

நீ நிற்குமிடம் உனக்குப் புரிகிறதா?
நடுவில் நிற்பவர்கள் எப்போதுமே விபத்துக்
குள்ளாகிருர்கள்

முன்னேறிவிடு உன் முன்னுல் வழிகள் தெளிவாயுள்ளன
எப்போதும் இடதுபுறமே செல்! மறக்காதே!

சாலை விதிகளைச் சரியாகப் புரிந்துகொள்!
சாலைகளில் நடுவே நின்று தயங்குபவர்களே
எப்போதும் விபத்துக்குள்ளாகிருர்கள்!

# பிரதமபேச்சாளரின் சிறப்புரை

● மூன்று மணிநேரப் பொதுக் கூட்ட மேடை
முதலில் வரவேற்றவர் பேசிய வரவேற்புரை
நாற்பது நிமிஷம் நன்ருய் நீண்டது
மாலைபோடுவார் கைத் தறித் துணியர் எல்லாம்
கூடியாடிக் கொன்றது இருபது நிமிஷம்

எண்பது வயதுத் தலைவருக்கு வேறு மேடைகள்
இசைவாய்க் கிடைப்பது மிகவும் துர்லபமாகும்
தன்பங்குக்கு அவர் பேசிய தலைமையுரை அறுவை
சரியாய் ஒருமணிக் கூறு முழுமணி நேரம்

குட்டிப் பிரசங்கிகள் பேட்டைப் பிரமுகர்கள்
வட்டம், கோட்டம், எல்லாம் பேசக்
கெட்டது வகையாய் இருமணி நேரம்
நான்கு மணிகள் பொறுமையாய் இருந்த

நாட்டு மக்கள் வயிற்றில் நிறைந்த
காட்டுப் பசியும் பர்ஸில் குறைந்த
சில்லறைக் காசும் மாத இறுதியின்
மந்த நிலைமையில் கடைசி பஸ்ஸைக்

கைவிட நேர்ந்தால் நடந்தே வீடு போக
நேரிடும் என்ற பயத்தின் நிமித்தமாய்
மெல்ல எழுந்து கும்பல் கும்பலாய்க் கலைந்தனர்
''இறுதியாக நிகழ்ச்சியின் மணிமுடி சிறப்புரை''

என்றும் ''முக்கியப் பேச்சாளர் பேசுவார்'' என்றும்
தலைவர் எழுந்து அறிவித்தபோது மைதானம் காலி,
பிரதம விருந்தினர் காலி மைதானத்தைக்
கனிவுடன் நோக்கிப் ''பெருமக்களே! தாய்மார்களே!

உடன் பிறப்புக்களே! ரத்தத்தின் ரத்தமே! ''என்று
எத்தனையோ சொல்லி அழைத்தும் யாருமில்லை!
அத்தனை பேரும் சதிசெய்து அகன்றிருந்தனர்.

# Scandal Wood

- Sandal Wood என்பதனைத் தவறாக
Scandal Wood என்றச்சுக் கோத்திருந்த
ஆங்கிலத் தினசரி இதழின் பிழையைத் திருத்திய
சீஃப் புரூஃப் ரீடர் உடனே

''காட்டு இலாகாப் பொறுப்பில் இருந்த
மந்திரி தம்பியே ஜீப்பில் இரவில்
சந்தன மரத்தைக் கடத்தினார்'' என்னும்
அடுத்த புரூஃபின் 'காலி' தேடி வரவே

முந்திய புரூஃபை மறுபடி திருப்பி வாங்கி
ஏற்கெனவே திருத்திய பிழையைப் பழையபடியே
Scandal Wood என்று பிழையாகவே அச்சிடச் சொன்னார்
''சில பிழைகள் சரியாகவே வாய்க்கின்றன!

சில 'சரி'கள் தான் பிழையாகப் போகின்றன''
தெருவில் பிழையாய் நடப்பதை இங்கே
புரூஃபில் மட்டுமே திருத்திப் புண்ணிய மென்ன?
பிழையாய் இருப்பதைத் திருத்தும்போது

பிழையை மறைக்கத்துணையாய் இருப்பது
பிழையினும் பெரும்பிழை என்றே நினைத்தார்
பாவம் அந்த புரூஃப் ரீடர்!

# இந்தி எதிர்ப்பு வீரர்

● இந்தி அரக்கி எழுத்தெழுத்தாக
இருக்கும் இடங்களைத் தேடி அழிக்கவே
வட்டச் செயலாளர் வகையருக் கொடுத்த
ரூபாய் நூறில் சட்டியும் தாரும்

மட்டையும் வாங்கி அழித்தது போக
மிச்சம் ரூபாய் எழுபது கிடைத்தது
கட்சித் தொண்டர் கட்டிளம் காளையர்
சிந்தனை மூளை யோசனை எதனையும்

சொந்தமாய்ச் செலவிடாது தலைவர் சொன்னதைத்
தந்தம் கடமையாய்ச் செய்துமுடிக்கும் செயல்வீரர்
நூறு மில்லியும் அவித்த முட்டையும்
வேறு வேருக வாங்கி யுண்ட பின்

மிச்சப் பணத்தில் மேனகா தியேட்டரில்
ஏ. சி. வசதியில் இருந்து பார்த்தது
'யாதோங்கி பாராத்' ஆகும்
இந்தி ஒலிக தமில் வால்க!

உடல் தமிலுக்கு உயிர் மண்ணுக்கு!
ஒலிக இந்தி! ஓங்குக தமிலே!
வெள்க தமிலர்! வீல்க வடவர்!

## சுழல் மாலை

- மேடையில் இருந்த பேசுவோர் பட்டியல்
அவையில் இருந்ததையும் விடவே அதிகம்
இலக்கிய மன்றச் செயலர் இருதய சாமி
வலக்கரத்தில் வாங்கி வந்ததோ ஒரேயொரு மாலை

கூட்டந் தொடங்குமுன் தலைவரை விளித்து
வாட்டமில் மாலையை மாணிக்க மாலையாய்த்
தலைவருக் கணிவித்தார் கூட்டத்திருந்த
சிலபேர் செய்தனர் பலமாய்க் கரகோஷம்

முதற்பேச் சாளருக்கும் வந்தது ஒருமாலை
முப்பதாவது பேச்சாளருக்கும் முழுசாய் ஒருமாலை
வாங்கி வந்ததோ ஒரேயொரு மாலை
முப்பது பேச்சாளருக்கும் முறை தவறாமல்

செப்பிடு மலர்மாலையை மாணிக்க மாலையாய்ச்
சாற்று வதாகச் சடங்குடன் பாந்தமாய்ப்
போட்டு மகிழ எப்படி வந்தன மாலைகள்?
எனக்குள் வியப்பு எனக்குள் மலைப்பு

தலைவர் கழற்றி வைத்ததும் பின்புற மிருந்து
கலைவலார் கரங்கள் கணக்காய் நீண்டு
கடத்தின மாலையை—மறுபடி அதுவே
மாணிக்க மாலையாய்ப் பேசுவோர் கழுத்தில்

பின்பும் விழுந்தது பேசுவார் கழற்றப்
பின்புறம் கடந்துபோய் மீண்டும் அதுவே
இம்முறைப் படியே இலகுவாய் நயமாய்
முப்பது பேருக்கும் முன்னால் வந்தது

இருதய சாமி இலக்கிய மன்றச்
செயலர் மட்டுமா? எத்தனை காலம்
பயிற்சி இருந்தால் இப்படித்திறமை
சாத்திய மாகும் என்றே என்னுள்

அதிசய உணர்வு அதிகமாய்ப் பொங்கக்
கூட்ட முடிவில் தனியே கூப்பிட்டு
இருதய சாமியை இருதய மாரப்
பாராட் டுரைத்துப் பலவாய்ப் புகழ

'வேறு வழியில்லை மன்றத்தில் பணம் குறைவு
மாலை விலையோ அதிகமாய்ப் போச்சு
சாமர்த்தியமாய்ச் சமாளிக்கிறேன்' என்றார்
சபாஷ்! உமது சாமர்த்தியம் வாழ்க! என்றேன்.

# சட்டம்

‘நோ பார்க்கிங்’ ஏரியாவில் தைரியமாய்ப்
பாதையின் குறுக்கே பார்க்கிங்லைட் இல்லாமல்
தாறுமாறாய்த் தறிகெட்டு இருளில் நிற்கும் வேறு நாட்டுக்
காரை விரைந்து வந்து நம்பர் குறித்து

டிராஃபிக் ‘அஃபென்ஸ்’ என சார்ஜ்ஷீட்
எழுதிய காவலர், ஓட்டி வந்தவர்
லா மினிஸ்டர் மாண்புமிகு சட்டநாதனின்
மகன் என அறிந்ததும் பயந்து பணிந்து

காருக்கும் மகனுக்கும் காலில் விழாதகுறையாய்ப்
பத்துத் தடவை சல்யூட் அடித்துப்பதறிப்
பாவமன்னிப்பும் பெற்று உய்ந்தார்
தெரியாத் தனமாய்ச் சிக்கலில் விழுந்தது

அறியாமை என்றே ஆதங்கப்பட்டுக்
கன்னத்தில் பலமாய்ப் போட்டுக் கொண்டே கைகளும் கூப்பினார்
காரும் டிரைவரும் கண்களில் மறையும் வரை
அந்தத்திக்கு நோக்கித் தெண்டனுமிட்டார்.

★

# உண்ணு விரதம்

- இலங்கைத் தமிழருக் காய் இன்று உண்ணுவிரதம்
கலங்காத் தலைவர் கண்ணியச் சின்னம்
மாற்ருர் நடுங்கும் மனத்திடம் உடையார்
அடலேறு அரிமாவளவன் காலை எட்டுமணிமுதல்

மாலை ஐந்து மணி வரை உண்ணுவிரதம்
என்று ஆளுயரச் சுவரொட்டி அடித்தொட்டி
ஏழரை மணிக்கே வீட்டில் ஏ.சி. ரூமில்
மனைவியைத் தவிர யாரும் அறியாமல்

மெதுவடை ஐந்தும் இட்டிலி பத்தும்
ஆம்லெட் இரண்டும் டிகிரி காபியும்
சீராய்உண்டு செரித்த பின்னர்
வாட்டமின்றி விரதம் இருந்து முடித்தார்.

மாலைப் பத்திரிகையில் செய்தி வந்தது
''பச்சை நீரும் பருகாத் தவிப்புடன்
மெச்சும் தலைவர் இருந்தார் பட்டினி
பழரசம் அருந்தி விரதம் முடிந்தது''

